Bibliographic Record Target

*மன்றம். -- மலர் 2, இதழ் 1 (May 1, 1953) - --*
*Madras : V. R. Nedunchezhiyan, 1953-*
*v. : ill. ; 23 cm.*
*Weekly, May 5, 1957-*
*Bi-monthly, May 1, 1953 – Apr. 15, 1957*
*In Tamil.*
*Editor: இரா. நெடுஞ்செழியன்*
*Description based on: மலர் 2, இதழ் 1 (May 1, 1953)*
*Record No. 1039*

*Manram. -- Malar 2, ital 1 (May 1, 1953) - --*
*Madras : V. R. Nedunchezhiyan, 1953-*
*v. : ill. ; 23 cm.*
*Weekly, May 5, 1957-*
*Bi-monthly, May 1, 1953 – Apr. 15, 1957*
*In Tamil.*
*Editor: Irā. Neṭuñceḻiyaṉ*
*Description based on: Malar 2, ital 1 (May 1, 1953)*
*Record No. 1039*

35 mm microfilm

Image placement: IA (IIA) IB IIB

Date filming began: 22 October, 2008

# List of issues filmed

## மன்றம்

மலர் 5, இதழ் 10 (Sept. 15, 1956)
மலர் 5, இதழ் 11 (Oct. 01, 1956)
மலர் 5, இதழ் 12 (Oct. 15, 1956)
மலர் 5, இதழ் 13 (Nov. 01, 1956)
மலர் 5, இதழ் 14 (Nov. 15, 1956)
மலர் 5, இதழ் 15 (Dec. 01, 1956)
மலர் 5, இதழ் 16 (Dec. 15, 1956)
மலர் 5, இதழ் 17 (Jan. 01, 1957)
மலர் 5, இதழ் 18 (Jan. 15, 1957)
மலர் 5, இதழ் 19 (Feb. 01, 1957)
மலர் 5, இதழ் 20 (Feb. 15, 1957)
மலர் 5, இதழ் 21 (Mar. 01, 1957)
மலர் 5, இதழ் 22 (Mar. 15, 1957)
மலர் 5, இதழ் 23 (Apr. 01, 1957)
மலர் 5, இதழ் 24 (Apr. 15, 1957)

*Continued ...*

*மலர் 6, இதழ் 1 (May 05, 1957)*
*மலர் 6, இதழ் 2 (May 12, 1957)*
*மலர் 6, இதழ் 3 (May 19, 1957)*
*மலர் 6, இதழ் 4 (May 26, 1957)*
*மலர் 6, இதழ் 5 (June 02, 1957)*
*மலர் 6, இதழ் 6 (June 09, 1957)*
*மலர் 6, இதழ் 7 (June 16, 1957)*
*மலர் 6, இதழ் 8 (June 23, 1957)*
*மலர் 6, இதழ் 9 (June 30, 1957)*
*மலர் 6, இதழ் 10 (July 07, 1957)*
*மலர் 6, இதழ் 11 (July 14, 1957)*
*மலர் 6, இதழ் 12 (July 21, 1957)*
*மலர் 6, இதழ் 13 (July 28, 1957)*
*மலர் 6, இதழ் 14 (Aug. 04, 1957)*
*மலர் 6, இதழ் 15 (Aug. 11, 1957)*
*மலர் 6, இதழ் 16 (Aug. 18, 1957)*

*Continued ...*

*மலர் 6, இதழ் 17 (Aug. 25, 1957)*

*மலர் 6, இதழ் 18 [i.e. 19] (Sept. 08, 1957)*

*மலர் 6, இதழ் 20 (Sept. 15, 1957)*

*மலர் 6, இதழ் 21 (Sept. 22, 1957)*

*மலர் 6, இதழ் 22 (Sept. 29, 1957)*

*மலர் 6, இதழ் 23 (Oct. 06, 1957)*

*மலர் 6, இதழ் 24 (Oct. 13, 1957)*

*மலர் 6, இதழ் 25 (Oct. 20, 1957)*

*மலர் 6, இதழ் 26 (Oct. 27, 1957)*

*மலர் 6, இதழ் 27 (Nov. 03, 1957)*

*மலர் 6, இதழ் 28 (Nov. 10, 1957)*

*மலர் 6, இதழ் 29 (Nov. 17, 1957)*

*மலர் 6, இதழ் 30 (Nov. 24, 1957)*

*மலர் 6, இதழ் 32 (Dec. 08, 1957)*

*மலர் 6, இதழ் 33 (Dec. 15, 1957)*

*மலர் 6, இதழ் 34 (Dec. 22, 1957)*

*மலர் 6, இதழ் 35 (Dec. 29, 1957)*

*Maṉṟam*

*Malar 5, itaḻ 10*

*September 15, 1956*

Record no. 1039

# "யாரையடா சொன்னுய் அது!"

தன்மதிப்பு இயக்கம் தோன்றி அது பகுத்தறிவுக் கொள்கைப் பரப்பலில் மிக மும்முரமாக ஈடுபட்டிருந்தகாலத்தில், கடவுள்-மதம்-வேதம்-புராணம்-இதிகாசம்-சாத்திரம்-சம்பிரதாயம் ஆகியவை பற்றிப் பகுத்தறிவு முறையில் ஆராய்ந்து ஆராய்ச்சிக் கருத்துக்களை வெளியிடத் தலைப்பட்டது. புராண இதிகாசங்களில் பொதிந்து கிடக்கும் மூடப் பழக்க வழக்கங்கள், குருட்டு நம்பிக்கைகள், இழிதன்மைகள், பொய்மைகள், புனைசுருட்டுக்கள், அறிவுக்கொவ்வாக் கற்பனைகள் போன்ற பலவும் தன்மதிப்பு இயக்கத்தினரால்சுட்டிக் காட்டப்பட்டு வெறுத்தொதுக்கப்பட்டன.

தன்மதிப்பு இயக்கத்தினரின் பேச்சுக்களையும், எழுத்துக்களையும் கண்ட வைதீகர்கள் வெகுண்டெழுந்தனர்; தன்மதிப்பு இயக்கத்தினரை வரைமுறையின்றி ஏசினர், தூற்றினர், இழித்துரைத்தனர், பழித்துப்பேசினர். தன்மதிப்பு இயக்கத்தினரை நேரியமுறையில் எதிர்த்துநிற்கத் தாளமாட்டாமல், பிறகு அஞ்சி, அடங்கி, ஒடுங்கினர். தன்மதிப்பு இயக்கம் வீறுநடையுடன் வெற்றிவலம் புரிந்துவந்தது. இப்படியாகச் சில ஆண்டுகள் உருண்டு ஓடின.

1942-43 ஆண்டுகள் வாக்கில் இராமாயணத்தைப் பற்றிய ஆராய்ச்சிக் கருத்துக்களை வெளியிட்டு, அதன் இழிதன்மையையும், அது திராவிடரை இழித்துரைக்கும் தன்மையையும், மூடபக்தி-மூடநம்பிக்கை-மூடப்பழக்க வழக்கம் ஆகிய [illegible] றிற்கு அதுஉறைவிடமாக விளங்கும் தன்மையையும் அதில் பொதிந்து [illegible] ஆபாசக் கருத்துக்களையும்-கற்பனைகளையும் விளக்கிப் பெரியாரும் பிர[illegible] போது, வைதீகப்பண்டிதர்கள் மீண்டும வெகுண்டெழுந்து எதிர்க்கத் [illegible] "கம்ப இராமாயணம் தெய்வீகத்தன்மை வாய்ந்தது-அது அப்படி [illegible] உண்மைவாய்ந்தது - அதனை அழிக்க யாராலும் முடியாது - அ[illegible]ல் போட்டாலும் அது பொசுங்காது!" என்று வைதீகப்பண்டிதர்கள் [illegible]த் தன்மதிப்பு இயக்கத்தினரை அறைகூவி அழைத்தனர். பெரியார் அவர்களும், அறிஞர் அண்ணு அவர்களும் அந்த அறைகூவலை ஏற்று, "கம்ப இராமாயணம் தெய்வீகத்தன்மை உடையதும் அல்ல; உண்மைவாய்ந்ததும் அல்ல, அதனைத் தீயிலே போடுகிறேம் அது பொசுங்குகிறதா, இல்லையா என்று பாருங்கள்! அதனிடம்கொண்டுள்ள பக்தி சிறுகச்சிறுக அழிகிறதா, இல்லையா என்று நோக்குங்கள்!" என்று வைதீகப் பண்டிதர்களைப் பார்த்துக் கேட்டு விட்டுத் தீவிரக் கொள்கைப்பரப்பலில் (பிரசாரத்தில்) இறங்கினர்.

அறிஞர் அண்ணுஅவர்கள் தமிழகம் எங்கணும் சுற்றும் பயணம் செய்து, கம்பராமாயணத்தை அக்குவேறு ஆணிவேருக அலசிக்காட்டி, மிகத் தீவிரமான கொள்கைப் பரப்பலில் ஈடுபட்டார்கள். வைதீகப்பண்டிதர்களை வாதுக்கழைத்தார். வாதாடும் வல்லமையிற் சிறந்த இருபெரும் பண்டிதர்களான தோழர்கள் ஆர். பி. சேதுப்பிள்ளை, ச. சோமசுந்தர பாரதியார் ஆகிய இருவரும் வாதாட வந்தனர். இருவரும் தோற்றுப்போய் ஓடி உட்கார்ந்து விட்டனர்.

அப்பொழுது இராமாயணத்தை நன்கு படித்தறிந்த சாயபு ஒருவர், "அண்ணுத்துரைக்கு என்ன தெரியும்? தமிழில் ஒரு பாட்டுச் சொல்லத் தெரியுமா?" என்று ஆணவத்தோடு கேட்டாராம். அதற்கு விடையிறுக்கும் முகத்தான் அறிஞர் அண்ணு அவர்கள், "எனக்குத் தமிழில் ஒரு பாட்டு சொல்லத் தெரியுமா என்று இராமாயண சாயபு கேட்டாராம். எனக்குத் தமிழில் பாட்டுகள் சொல்லத் தெரியுமோ தெரியாதோ, ஆனுல் ஒரே ஒரு பாட்டு மட்டும் தெளிவாகச் சொல்லத் தெரியும்.

**எட்டேகா லட்சனமே எமனேறும் பரியே**  
**மட்டிற் பெரியம்மை வாகனமே - முட்டமேற்**  
**கூரையில்லா வீடே குலராமன் தூதுவனே**  
**யாரையடா சொன்னுய் அது.**

[எட்டேகால் லட்சணமே - அவலட்சணமே; எமனேறும் பரியே - எருமையே; மட்டிற் பெரியம்மை வாகனமே-கழுதையே; முட்டமேற்கூரையில்லா வீடே-குட்டிச் சுவரே; குலராமன் தூதுவனே-குரங்கே.]

என்பதுதான் அந்தப்பாட்டு. "இதை அந்தச் சாயபுவிடம் போய்ச் சொல்லுங்கள்" என்று ஒரு பொதுக்கூட்டத்தில் பேசும்போது குறிப்பிட்டார்கள்.

அண்ணுவின் இந்தப் பேச்சைக் கேள்வியுற்ற அந்தசாயபு ஏன் மீண்டும் வாய் திறக்கிருர்? அவ்வளவுதான்! அப்படியே அடங்கி ஒடுங்கிவிட்டார்!




மலர் 5 ★ (15—9—56) ★ இதழ் 10

# பாடமொழியும் பயிற்சியும்

இந்தியத் துணைக்கண்டத்தில் கல்வித் துறையில் எத்தகைய பயிற்சியையும், பாட மொழியையும் மேற்கொள்வது என்பதுபற்றி, அண்மையில் புதுடில்லியில் கூடிய கல்வி அமைச்சர்கள் மாநாடு சில பல முடிவுகளை எடுத்துள்ளது. மாநாட்டிற்கு இந்தியக் கல்வி அமைச்சர் தோழர் அபுல்கலாம் ஆசாத் அவர்கள் தலைமை தாங்கியுள்ளார். பல்வேறு அரசுகளையும் சார்ந்த கல்வி அமைச்சர்கள் அந்த மாநாட்டில் கலந்து கொண்டுள்ளனர்.

செகண்டரி கல்விக் கட்டத்தில் ஒவ்வொருமாணவனும் தாய் மொழியைத் தனிப்பட்ட முறையிலோ அல்லது வட்டார மொழியுடனே கற்க வழி செய்வது;

ஆங்கிலம், இந்தி மொழிகளைச் செகண்டரி கட்டத்தில் கற்க வழி புரிவது ;

ஆங்கிலத்தை செகண்டரி நிலையிலேயே கட்டாயமாகப் போதிக்க வழி செய்வது ;

செகண்டரி கல்விக் கட்ட இறுதிக்குள் மாணவர்கள் போதிய அளவுக்கு ஆங்லக் கல்விபெற நடவடிக்கைகள் எடுப்பது;

பல்கலைக் கழகக் கட்டத்தில் ஆங்கிலத்திலேயே கல்வி கற்பிப்பது ;

ஆதாரக் கல்விக்கு முழுக்க முழுக்க ஆக்கம் தருவது ;

பட்டப்படிப்புக்குக் கீழுள்ள ஆசிரியர் பயிற்சி நிலையங்களை ஆதாரக் கல்வி ஆசிரியர் பயிற்சி நிலையங்களாக மாற்றுவது;

இந்தி பேசப் படாத பகுதிகளில் ஹிந்தியைத் தீவிரமாகப் பரப்ப நடவடிக்கைகள் எடுப்பது ;

போன்றன மாநாட்டின் முக்கிய முடிவுகளாகும்.

தாய்மொழி அல்லது வட்டார மொழிபற்றியும், ஆங்கில மொழிபற்றியும் மாநாடு எடுத்திருக்கும் முடிவுகள் வரவேற்கத்தக்கனவே என்றாலும், இந்தி மொழிபற்றியும், ஆதாரக் கல்விபற்றியும் எடுத்திருக்கும் முடிவுகள் குறிப்பாகத் திராவிடத்தைப் பொறுத்தவரையில் முன்னேற்றத்தையோ, வளர்ச்சியையோ தருவன அல்ல. அவற்றிற்காகச் செலவழிக்கப்படும் பொதுநேரம்—நினைப்பு—உழைப்பு—அறிவு—ஆற்றல்—பொருள் எல்லாம் விழலுக்கிறை நீராகவே முடியும்,

மொழிப் பயிற்சியைப் பொறுத்த வரையில் பொதுவாக இந்தியத் துணைக்கண்டம் முழுவதிலும், குறிப்பாகத் திராவிடத்தில் தாய்மொழி அல்லது வட்டார மொழியோடு அகில உலகப் பொது மொழியான ஆங்கில மொழி ஆக இரண்டு மொழிகள் மட்டுமே போதுமானவை. வேறு எந்த மொழியும் அரசினரால் கட்டாயமாகப் புகுத்தப்பட வேண்டிய தேவையில்லை. ஒவ்வொருவரும் தனிப்பட்ட முறையில் வேண்டுமானால் தத்தம் விருப்பத்திற்கேற்ப, பல்வேறு மொழிகளைப் பயின்று கொள்ளட்டும். அதற்கான வசதிகளை வேண்டுமானால் குறிப்பிட்ட சில இடங்களில் அரசாங்கம் செய்து தரலாம்.

அகில உலகப் பொதுமொழியாகவும், அரசியல் அறிவியல் வாணிக மொழியாகவும் விளங்கும் ஆங்கிலத்தின் தேவையை நாம் இழந்துவிடக்கூடாது. வட்டாரத்திற்குள்ளே நடைபெறும் எல்லா நிகழ்ச்சிகளையும் வட்டார மொழியின் உதவியோடு கவனித்துக்கொள்ளலாம்; வட்டாரத்தின் வெளியேயுள்ள பிறநாடுகளோடும் பகுதிகளோடும் தொடர்புகொள்ள ஆங்கில மொழியைப் பயன்படுத்திக் கொள்ளலாம். எனவேதான் வட்டார மொழியோடு ஆங்கில மொழியைமட்டும் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் கற்பித்தால் போதுமானது. இந்திபோன்ற வேறு மொழிகளை நேரிடையாகவோ அல்லது மறைமுகமாகவோ கட்டாயமாகக் கற்பிக்கவேண்டிய இன்றியமையாமை இல்லை.

ஆரம்பக் கல்விக்கட்டத்தில் தாய்மொழியை அல்லது தாய்மொழியோடு வட்டார மொழியைக் கட்டாயக் கல்வியாக்க வேண்டும்; செகண்டரி கல்விக் கட்டத்திலும் பல்கலைக் கழகக்கட்டத்திலும் வட்டார மொழியோடு ஆங்கில மொழியையும் கட்டாயமாகக் கற்பிக்க வேண்டும்; செகண்டரி கட்டத்தில் பாடங்களை எல்லாம் வட்டார மொழியிலேயே கற்பிக்க வேண்டும்; பல்கலைக் கழகக் கட்டத்தில் (வட்டார மொழி பக்குவம் அடையும் காலம் வரையில்) ஆங்கிலமே பாடமொழியாக இருக்கவேண்டும்; வட்டார மொழி பக்குவம் பெற்றவுடன் அதுவே பல்கலைக்கழகக் கட்டத்திலும் பாடமொழியாக இருக்க வேண்டும்; எந்தக் காலத்திலும் ஆங்கில மொழிப் பயிற்சி செகண்டரி கட்டத்திலும் பல்கலைக் கழகக் கட்டத்திலும் இருக்க வேண்டும்.

# கருத்துக் கதிர்

## வடக்கும் தெற்கும்

"இந்தியப் பேரரசு மாநிலங்களின் கல்வித் துறை பற்றிய நடவடிக்கைகளில் அளவுக்கு மீறித் தலையிட்டு ஆதிக்கம் செலுத்துகிறது. மாநிலங்களுக்கு உதவிநிதி வழங்கும்போது இந்தியப் பேரரசு எந்தவித நிபந்தனையும் விதிக்கக் கூடாது.

"வடநாட்டில் 'இந்தியாவின் பெருமைக் குரியது' என்று சொல்லப்படும் தாமோதரப் பள்ளத்தாக்குத் திட்டத்திற்குப் பொதுமக்கள் பணம் பெருத்த அளவில் வீணாக விரயமாக்கப்படுகிறது. நான் அண்மையில் அதனை நேரிற்சென்று பார்வையிட்டேன். அங்கு ஆறு வேலை நடத்தும் பொறியர்கள் (Executive Engineers) இருப்பதைக் கண்டேன். அவர்களைத் தவிர மேற்பார்வையிடும் பொறியர் (Superintending Engineer) ஒருவரும் வேலை பார்த்து வருகிறார். ஆனால் தெற்கே கோவை மாவட்டத்தில் பத்துகோடி ரூபாய் செலவில் கட்டப்பட்ட கீழ் பவானி அணைக்கட்டுத் திட்டத்தை ஒரே ஒரு வேலை நடத்தும் பொறியர் நிறைவேற்றி வைத்தார்.

"வடநாட்டில் சர்வோதயத்தைப்பற்றி மிகவாகப் பேசுகிறார்கள், ஆனால் அமெரிக்கப் பொறிகளை (யந்திரம்) அணைக்கட்டுத் திட்டத்திற்கு ஏராளமாக இறக்குமதி செய்கிறார்கள். அவர்கள் சிமெட்டையும் ஏராளமான அளவில் வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்கிறார்கள். ஆனால் தென்னாட்டிலோவெனில் பெரிய பெரிய அணைக்கட்டுகளெல்லாம் கற்களைக்கொண்டே கட்டப்படுகின்றன. அவைகள் பன்னெடுங் காலத்திற்கு உறுதியாகவே இருந்து வருகின்றன. குறைந்த செலவில் கட்டி முடிக்கக் கூடிய பல அணைக்கட்டுகளுக்கு இந்தியப் பேரரசு ஏராளமான பொருளைச் செலவிட்டு வருகிறது.

"அதிகாரிகளின் வேலைகளில் இந்திய அமைச்சர்கள் அவசியமற்ற முறையில் அதிகமாகத் தலையிடுகிறார்கள். அதிகாரிகளால் நிறைவேற்றப்படும் வேலை நூற்றுக்கு நூறு அப்படியே சரியாக இருந்தாலுங் கூட அதில் அமைச்சர்கள் வேண்டுமென்றே இங்கொன்றும் அங்கொன்றுமாகத் திருத்தம் சொல்லுகிறார்கள். அதுபோலவே மாநில அரசுகளின் நடவடிக்கைகளில் இந்தியப் பேரரசு அளவுக்கு மீறித் தலையிடுகிறது.

"மத்திய ஆட்சியின் ஏகாதிபத்யத்தை எதிர்த்து நாம் போர் தொடுக்க வேண்டிய காலம் ஒன்று வந்தாலும் வரக்கூடும் என்று நான் அச்சப்படுகிறேன். ஒன்றாக இணைந்து நின்று செயலாற்றும் சமத்துவ முறை ஏற்பட வேண்டுமே ஒழிய, ஒருவரை ஒருவர் ஆதிக்கம் கொள்ளும் முறை அறவே கூடாது.

"மத்திய ஆட்சி ஆதிக்கம்பற்றி இன்னும் எவ்வளவோ சொல்ல வேண்டி யிருக்கிறது. நான் கவர்னர் பதவியினின்றும் விலகியதற்குப் பிறகு, அதுபற்றி நிரம்ப செய்திகள் வெளியிடுகிறேன்."

—என்று தோழர் பி. எஸ். குமாரசாமிராசா அவர்கள் 28—8—56 இல் கோவையில் உயர்நிலைப்பள்ளிக் கட்டிடத் திறப்பு விழாவின்போது குறிப்பிட்டுள்ளார்.

* * *

## நிலைமையை உணர்கிறார்

"இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ்த் துவக்கப்பட இருக்கும் 18 தொழில் நுட்பக் கல்லூரிகளில் ஒன்றே ஒன்றை மட்டுமே தென்னாட்டில் நிறுவுவதற்குத் திட்டம் போட்டிருப்பது மிக்க ஏமாற்றத்தைத் தருவதாகும். தொழில் நுட்பக் கல்வியில் தென்னாடு ஒரு அளவுக்கு வளர்ந்திருக்கவே செய்கிறது என்றாலும், மேற்கொண்டு வளர்வதற்குத் தடை ஏதும் இருக்கக் கூடாதல்லவா?"

—என்று நிதி அமைச்சர் தோழர் சி. சுப்பிரமணியம் அவர்கள் 28—8—56 இல் கோவையில் நடைபெற்ற தெற்கு வட்டாரக் கல்வி மாநாட்டில் பேசும் போது கூறியுள்ளார்.

* * *

## அவர்களது வீரம்

"கையிலுள்ள பிரதேசங்களை விடவும் மாட்டோம். வரவேண்டிய பிரதேசங்களையும் போராடிப் பெற்றுக் கொள்வோம்."

—என்று ஆந்திரா அமைச்சர் தோழர் ஓ. புல்லா ரெட்டி அவர்கள் திருத்தணித் தமிழ்ப் பகுதிகள் குறித்துத் திருத்தணியில் 6—9—56 இல் பேசும் போது குறிப்பிட்டுள்ளார்.

* * *



# செய்திச்சுருள்

## இடைவிடா ஈருருளி ஓட்டம்

இடைவிடாது ஈருருளி வண்டியை ஓட்டுவதில் பம்பாய் கார்வாரைச் சேர்ந்த ஆனந்தராவ் என்பவர் உலகிலேயே முதல்வராகத் திகழ்கிறார். அவர் 130 மணி நேரம் இடைவிடாது ஈருருளி வண்டியை ஓட்டிக்காண்பித்திருக்கிறார். இதுவரை உலகில் 125 மணி ஓட்டியவரே முதல்வராகக் கருதப்பட்டு வந்தார். அவர் போலந்து நாட்டைச் சேர்ந்த பெண்மணி யாவார். அவர் 1952 ஆம் ஆண்டு ஒலிம்பிக் விளையாட்டின்போது தம் திறமையை நிலைநாட்டினார்.

ஆனந்தராவ் இவ்வாண்டு ஆகஸ்டுத் திங்கள் 30 ஆம் நாள் காலை 8-30 மணிக்கு ஈருருளி ஓட்டத் தொடங்கினார். செப்டம்பர் திங்கள் 4 ஆம் நாள் மாலை 6-30 மணிக்கு இறங்கினார். ஐந்து நாட்களாகத் தூக்கமின்றி மொத்தம் 900 மைல் ஓட்டியும் அவர் களைப்படையாமல் முகமலர்ச்சியுடன் காணப்பட்டார். அவர் வெறும் நீராக உள்ள உணவுகளையே உட்கொண்டார். ஈருருளி ஓட்டும்போது மிக எளிதாக உடைகளை மாற்றிக்கொண்டார்.

* * *

## திராவிடத்தில் வைரச் சுரங்கம்

திராவிடத்தின் ஒரு மாநிலப்பகுதியான ஆந்திராவில் வஜ்ரகரூர் என்ற இடத்தில் வைரச்சுரங்கங்கள் இருப்பதாக அறியப்பட்டிருக்கிறது. மழை பெய்தபோது மண்ணரிப்பு ஏற்பட்டு, வைரச்சுரங்கங்கள் இருப்பதற்கான அறிகுறிகள் தென்பட்டனவாம். சிறிது ஆராய்ச்சி நடத்திப் பார்த்தபோது வைரச்சுரங்கங்கள் இருப்பது உறுதியாகத் தெரிய வந்ததாம். 1956-57 ஆம் ஆண்டில் அந்த இடத்தை அகழ்ந்து வைரம் எடுப்பதற்கான முயற்சியை மேற்கொள்ள இந்தியப் பேரரசினர் திட்டமிட்டுள்ளனர்.

* * *

## செவ்வாய்க் கோள்

செவ்வாய்க் கோளின் (கிரகத்தின்) தென் மண்டலத்தில் பனிப்பரப்பு மூடிக்கொண்டிருப்பதாகத் தென்படுவதாக ரஷ்ய வான நூலறிஞர்கள் கூறுகின்றனர். செவ்வாய்க் கோளில் இதுபோல் காணப்படுவது இதுவே முதல் தடவையாகும். அமெரிக்க அறிவியல் அறிஞர்களுக்குத் தெரியப்படுத்தியதில் அவர்களும் இதேபோல் பார்த்திருப்பதாகக் கூறினராம். 10—9—56 திங்கட்கிழமையன்று செவ்வாய் உலகிற்குஅருகில் வந்ததாம். அதுபோது அந்தக்கோளை இன்னும் உற்று நோக்கி ஆராய்ச்சி நடத்தியுள்ளனர்.

* * *

## நெய்வேலியில் நிலக்கரி

தென்னாற்காடு மாவட்டம் நெய்வேலியில் பழுப்பு நிலக்கரிச் சுரங்கத்திலுள்ள நீரை அப்புறப்படுத்திவிட்டு, நிலக்கரியை வெட்டி எடுப்பதற்கான முயற்சிகள் இப்பொழுது மேற்கொள்ளப்பட்டுள்ளன. ரூ. 68 கோடி செலவாகும் திட்டம் ஒன்று தீட்டப்பட்டுள்ளது. இத்திட்டத்தின்மூலம் 35 இலட்சம் டன் நிலக்கரி வெட்டி எடுக்கப்படும். இதைக் கொண்டு 2,11,000 கிலோவாட் ஆற்றலுள்ள மின்சார நிலையம் நிலைநிறுத்தப்படும்! இவை தவிர ஆண்டு ஒன்றுக்கு 3,80,000 டன் (எரி பொருளுக்காகப் பயன்படும்) பிரிக்கெட்களும், 70,000 டன் இரசாயன எருவும் உற்பத்தி செய்யப்படும். 1960 ஆம் ஆண்டு வாக்கில் வர்த்தக முறையில் நிலக்கரி வெட்டி எடுக்க ஆரம்பிக்கப்படும் என எதிர்பார்க்கப்படுகிறது. பழுப்பு நிலக்கரி வெட்டி எடுக்கப்பட்டு மின்சாரமும் உற்பத்தியானதும் ஆறு திங்கள்களில் இராசாயன உர உற்பத்தி ஆரம்பமாகும். இறுதியில் பிரிக்கெட்டுகள் உற்பத்தி துவங்கும்.

* * *

## ஸ்டாலின் பெயர்

## ஒழிப்புப் போராட்டம்

ஸ்டாலின் பெயர் ஒழிப்புப் போராட்டம் எல்லாத் துறைகளிலும் ரஷ்ய அரசினரால் மேற்கொள்ளப்பட்டு வருகிறது. ஸ்டாலின் பெயரில் அளிக்கப்பட்டுவந்த அகில உலக அமைதிப் பரிசுகள் இனி லெனின் பெயரில்

வழங்கப்படும் என்று அறிவிக்கப்படுகிறது. 1950—55 ஆண்டுகளுக்கிடையே அகில உலக அமைதிப்பரிசுகள் பெற்றவர்கள் லெனின் பரிசுகளைப் பெற்றவர்களாகவே கருதப்படுவர். ஏப்ரல் 22 ஆம் நாள் லெனின் பிறந்தநாள் விழாக் கொண்டாடும்போது இந்தப் பரிசுகள் இனி வழங்கப்படும். 75000 ரூபிள்கள் பெருமான 50 பரிசுகள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன.

* * *

## பணம் பாழாகும் படலம்

1955 ஆம் ஆண்டில் மத்திய அரசியலார் கிடங்குகளில் ரூ. 10,58,297 பெருமான 1,55,428 டன் அரிசியும், ரூ. 8,42,025 பெறுமான 2,21,422 டன் கோதுமையும் போதுமான பாதுகாப்பு அளிக்கப்படாததன் காரணமாகச் சேதப்பட்டும் கெட்டும் போயிருக்கின்றன. இந்திய அரசியலாரின் நிர்வாகத் திறமையின்மைக்கும், அசட்டையான போக்கிற்கும் இந்தச்செய்தி சிறந்த எடுத்துக் காட்டாக அமைந்திருக்கின்றன. இவற்றை விடப் பன்மடங்கு நட்டம் வேறுபல துறைகளிலும் ஆண்டுதோறும் ஏற்பட்டுக் கொண்டே வருகிறது.

* * *

## முதலில் கரும்புப்பயிரிட்ட நாடு

முதன்முதலில் உலகில் கரும்பு பயிரிட்ட நாடு இந்தியா. அதுவும் தென்னாடாகத்தான் இருக்கவேண்டும் என்று மரநூல் பேராசிரியர் வி. எல். மேத்தா என்பவர் அண்மையில் தெரிவித்துள்ளார். பண்டைத் தமிழ் இலக்கியங்களிலும், அதர்வ வேதத்திலும், கௌடல்ய சாத்திரத்திலும், மனுஸ்மிருதியிலும் கரும்பு பற்றிய குறிப்புக்கள் காணப்படுவதாக அவர் கூறியுள்ளார்.

கி. பி. ஆறுவது நூற்றாண்டில்தான் சீனர்கள் கரும்பு பயிரிடுவதை இந்தியாவினின்றும் கற்றுக்கொண்டனர். அதற்குப் பிறகு அதனைப் பாரசிக நாட்டினரும் கற்றுக் கொண்டனர். நாளடைவில் மேற்கத்திய நாடுகளும் கற்றுக்கொண்டன என்றும் அவர் தெரிவித்துள்ளார்

* * *

## வரிப்பணம் விரயம்

நீண்ட நாட்களுக்கு வாராததும், உறுதியாக இல்லாததும், விரைவில் கிழிந்துவிடக் கூடியதும், கிழிந்தாலும் தைத்துக்கொள்ள முடியாததும், மிகவான பஞ்சை விழுங்கிக்கொண்டிருப்பதும் ஆன கதரை ரூ. 76,86,000 அளவுக்கு இரயில்வே ஊழியர்களுக்காக 1955-56 இல் இந்தியப் பேரரசினர் வாங்கி யிருக்கின்றனர். சென்ற ஆண்டு ரூ. 10,13,000க்கு வாங்கினர்களாம். சென்ற ஆண்டைவிட இவ்வாண்டில் 7½-மடங்கு பணம் அதிகமாகப் போடப்பட்டிருக்கிறது. காங்கிரசின் பிற்போக்குத் திட்டத்திற்காகப் பொதுமக்களின் வரிப்பணம் பெரும் அளவில் பாழாக்கப்படுகிறது.

* * *

## ஐ.ஏ.எஸ். பரீட்சைக்கு விண்ணப்பம்

இந்தியப் பேரரசினரால் நடத்தப்படும் ஐ. ஏ. எஸ். பரீட்சை எழுத விரும்பி 22,896 பேர்கள் விண்ணப்பம் போட்டுள்ளார்கள். பரீட்சை 1956 டிசம்பர் திங்களில் நடைபெறும் என்று சொல்லப்படுகிறது. நூற்றுக்குக் குறைவானவர்கள்தான் தேர்ந்தெடுக்கப்படுவார்கள் என்றும் சொல்லப்படுகிறது.

* * *

## திராவிடத்தில் இல்மினட்

திராவிடத்தின் திரு—கொச்சிப்பகுதியில் 2,50,000 டன் இல்மினட்டும் (Illmenite) 1840 ரூட்டைலும் (Rutile), 1236 டன் மோனசைட்டும் (Monazite) 1954-55 ஆம் ஆண்டில் அவற்றிற்கான தொழிற்சாலைகளில் திரட்டப்பட்டிருக்கின்றன. இவைகளில் 2,41.628 டன் இல்மினட்டும், 254 டன் ரூட்டைலும், 800 டன் மோனசைட்டும் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கின்றன. 1600 டன் ஜிர்கான் (Zircon) பொருளும் அந்தத் தொழிற்சாலைகளில் திரட்டப்பட்டு அவ்வளவும் ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கின்றது. மேற்கூறப்பட்ட மூன்றுவகைப் பொருள்களின் மொத்த விலை மதிப்பு ரூ. 48,08,811 ஆகும்.

* * *

## உலகப் பொதுநல அவை

உலகப் பொதுநல அவை (W.H.O)யின் பணி உலகிலுள்ள மக்களில் ஆறில் ஒரு பகுதியினர்க்குச் சென்ற பத்தாண்டுக் காலத்தில் பயன்பட்டு வந்திருப்பதாக ஐக்கிய நாடுகளின் புள்ளி விவரம் கூறுகிறது. மலேரியா, க்ஷயரோகம், புத்துநோய் ஆகியவற்றைப் போக்குவதில் உலகப் பொதுநல அவை அரும்பாடு பட்டு வருகிறது.

* * *



# மேடைப் பேச்சு

தமிழ்வேள் திரு. பி. டி. இராசன், எம். எல். ஏ.

—(o)—

மனிதனின் பேச்சு குழந்தையின் மழலைச் சொல்லிலிருந்து உதித்தது. குழந்தைப் பேச்சையேதான் வள்ளுவர் பெருமையாகப் பேசுகிறர்.

"குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச் சொல் கேளாதவர்"

மழலைச் சொல்லின் இனிமை மனிதன் சொல்லில் இருக்குமா? சாதாரணமாக இராது. ஆனல் ஆனந்தப் பெருக்கெடுத்தநிலையில், மனிதன் ஆடவும், பாடவும், பேசவும் செய்கிறன். பேச்சு இனிமையுள்ளதாயின் அதுவே பாட்டுப்போல் ஒலிப்பதை நாம் உணர்கிறோம்.

நடனம், ஓவியம், பாடல், சமையல், உடுத்துதல் முதலியவைகளைப்போல் பேச்சும் ஒரு கலைதான். மற்றவைகளுக்கு எத்தகைய பயிற்சி தேவையோ, அத்தகைய பயிற்சி பேச்சுக்கும் வேண்டும். ஆதலால் ஒருவரின் பேச்சின் திறமையும், பெருமையும் அவரது பயிற்சியின் தன்மையைப் பொருத்ததாகிறது.

பேச்சு இருவகைப்படும்—:

1. மக்கள் தமக்குள் இயல்பாகப் பேசும் பேச்சு.

2. மேடைப்பேச்சு.

1. பேசவேண்டிய பொருள்பற்றி நன்குணர்ந்து எடுத்துச் சொல்லுவதில் பிறரைக் கவரும் முறையிலும் அவர்கள் அறியும் வகையிலும் எளியவிதத்தில் வேடிக்கையும் உல்லாசமும் கலந்து எழுச்சியும் இன்பமும் உண்டாகுமாறு பேசும் சீரிய பேச்சாளனே உரையாடலில் முதல் வரிசையில் கருதத்தக்கவனவான். அத்தகைய பேச்சையே உரையாடல் (Conversation) என்றும், பேச்சாளனை உரையாடலில் வல்லான் (Conversationalist) என்றும் ஆங்கிலத்தில் வழங்குவார்கள். உரையாடலின்போது, ஆண்கள் மிதமிஞ்சிய உற்சாகத்தில் மனம் போன போக்கில் அளவுக்கு மீறிப் பேசாதிருப்பதற்கு, மேல் நாட்டில், குறிப்பாகப் பிரான்சு தேசத்தைச் சேர்ந்த கல்வித்திறமையுள்ள பெருங் குடும்பத் தாய்மார்கள், அடிக்கடி படித்தவர்களை விருந்திற்கழைத்து, அவ் விருந்தில் அவர்களை உயர்வான பேச்சையே பேசும்படியான சூழ்நிலையை ஏற்படுத்தி வந்தார்கள். அத்தகைய கூட்டத்திற்குத்தான் சலாங் (Salan) என்பது பெயர்.

இம்மாதிரிக்கூட்டங்களில் அடிக்கடி கலந்து கொண்ட வழக்கத்தால், கலை (Art) யளவில் நின்ற உரையாடலானது, நுண்கலை (Fine-Arts) யாக உயர்ந்து விட்டது. உயர்குடும்பப் பெண்களின் முன் மாதிரியைக்கண்ட, பிற குடும்பப் பெண்களும் படித்தவர்களை விருந்திற் கழைத்து, ஆண்களும் பெண்களும் சரிநிகரான நிலை எய்தினர். இதனல் ஆடவர்கள் பெண்களுக்கு உயர் மதிப்பையளிக்கும் வாய்ப்பு ஏற்பட்டது; பேச்சில் செம்மையும் செழிப்பும் மிளிர்ந்தன.

மேற் சொன்ன விருந்தரங்கங்களின் மூலம் உரையாடல், நுண்கலை (Fine Art) ஆக உயர்ந்ததுடன் ஆடவர்களின் பேச்சில் செம்மையும், செழுமையும் (Refinement) வளர்ந்தன.

2. மேடைப்பேச்சு கிரேக்கர்களுடைய அரசியல் மக்கள் ஆட்சியை ஒட்டியது. ஒவ்வொரு நகரத்திலும், தனி ஜனநாயக ஆட்சி நிலவி வந்தது. நகர மக்களின் ஆதரவால்தான் காரியங்கள் முடிவெய்தின. அவ்வாதரவு பெற மேடைப் பேச்சு இன்றியமையாத கருவியாக விளங்கியது. இது மேடைப்பேச்சு (Oratory) என்றும், அத்தகைய பேச்சாளரைப் பெரும் பேச்சாளர் (Orator) என்றும் சொல்லப்பட்டது. இக்கலைக்குப் பிதா வென்று சொல்லப் படுபவரும், வழி காட்டியவரும் டிமாஸ்தனிஸ் (Demasthenes) என்பவர் ஆவார்.

கிரேக்கர்காலத்துக்குப் பின்னால் உரோமாபுரியிலும் சீசர்கள் காலத்துக்கு முன் கிரேக்கர் பழக்கத்தை ஒட்டியே அவர்களுடைய அரசாங்கம் நடைபெற்று வந்தது. உரோமாபுரியில் பேசுவதில் புகழ்பெற்றவர் சிசரோ (Cicero) இவருக்கு அடுத்தபடியாகப் பேச்சு வன்மையில் பிரசித்தி பெற்றவர், மார்க் அந்தோணி (Mark Antony) என்று சொல்லலாம்.

தளபதியான சீசர் (Ceasar) வெற்றிமேல் வெற்றிபெற்று உரோம்புரிக்குள் நுழைந்த போது, ஜனஆட்சிக்கு எதிராகத் தம்முடைய ஆட்சியை நிலை நாட்டிவிடுவாரெனப் பயந்த மக்களுடைய பிரதிநிதிகளில் சிலர் அவரைக் கொலை செய்தார்கள். அதுசமயம் மார்க் அந்தோணி, சீசரின் சவத்தை மக்கள் முன்வைத்துத் தம்முடைய பேச்சு வன்மையினால், கொலைபுரிந்தவர்களைக் கொலைகாரர்கள் என்று எடுத்துக்காட்டி இறந்துபோன சீசருக்குப் பெரும் புகழையும் கீர்த்தியையும் ஏற்படுத்தினார். அதன் பயனாகத்தான் உரோமாபுரியில் குடியாட்சி மறைந்து (முடியாட்சி) சீசர்களுடைய ஆட்சி ஆரம்பமாயிற்று. உரோமின் முதல் மன்னர் அகஸ்டஸ் சீசர்.

கிறிஸ்து காலத்துக்குப்பின் பேச்சில் வல்லவர்கள் மதபோதகர்களாகக் கிறிஸ்துவக் கோவில்களில் பேசுபவர்களானார்கள். கிறிஸ்து காலத்திலிருந்து முக்கியமாகப் படித்தவர்களே மதபோதகர்கள். கிறிஸ்துவின் போதனைகளை எடுத்துப் பேசுவதற்கு அவர்களுக்கு வாய்ப்பு ஏற்பட்டது. அவர்களிற் சிலர் பேச்சுத் திறனில் பெயர்பெற்றவர்களானார்கள். அதற்குப் பின்னால் பேச்சாளர்களுக்கு அவசியம் ஏற்பட்டது இங்கிலாந்தில்தான்.

முதலாவது சார்லஸ் அரசர் கொலையுண்டபின் ஆங்கிலேயப் பாராளுமன்றத்துக்குத் தளபதி கிராம்வெல் மூலம் ஜனநாயக முறையில் அதிக அதிகாரம் ஏற்பட்டது. அவர் காலத்துக்குப்பின் முடியரசு திரும்பிவந்தபோதிலும் பாராளுமன்ற அதிகாரம் குறையவில்லை. பல காரணங்களைக்கொண்டே அதன் அதிகாரம் நாளடைவில் மேலோங்கி வந்தது. அந்தச் சமயங்களில்தான் அரும்பெரும் பேச்சாளர்கள் தோன்றினார்கள். அவர்களில் ஒருவரான எட்மண்டுபர்க்கை எந்நாளும் நாம் மறக்க முடியாது. ஏனென்றால், அவர் கிழக்கிந்தியக் கம்பெனி காலத்தில் கவர்னர் ஜெனரலாகயிருந்த வாரன்ஹேஸ்டிங்ஸ்மீது, இந்தியர்களைக் கொடுமைப்படுத்தி ஆங்கில மக்களுக்குக் கெட்ட பெயரை ஏற்படுத்தினாரென்று குற்றஞ்சாட்டி ஓர் இரவு முழுவதும் தீவிரமாகப் பேசினார்.

முதல் உலக மகாயுத்தத்தில் ஆங்கிலப் பிரதமர் லாயிட் ஜியார்ஜ் பெரும் பேச்சாளி என்று பெயர் பெற்றார். இரண்டாவது உலக மகாயுத்தகாலத்தில் ஆங்கிலப் பிரதமர் வின்ஸ்டன் சர்ச்சில் தம் பேச்சு வன்மையினால் தம் நாட்டைக் காப்பாற்றியதும் அல்லாமல் மேல் நாட்டு நாகரிகத்தைக் காப்பாற்றியதன்மூலம் ஜனநாயக ஆட்சியையும் மக்கள் உரிமையையும் காப்பாற்றினர்.

நம் நாட்டைக் கவனிக்கும்பொழுது திறமையான பேச்சாளர்கள் பலர் இருந்திருக்கிறார்கள் அவர்களில் முக்கியமானவர்களின் பெயர்களைக் குறிப்பிடுகிறேன். தாதாபாய் நௌரோஜி, பிரோஸ்ஷா மேத்தா, பிபின் சந்திரபால், சுரேந்திரநாத் பானர்ஜி, சுவாமி விவேகானந்தா, விநாயக தாமோதர சவர்க்கார், வலங்கைமான் சீனிவாச சாஸ்திரிகள், வ. உ. சிதம்பரம் பிள்ளை, சி. ஆர். தாஸ், புலாபாய் தேசாய், போஸ்சகோதரர்கள், சி.ஆர். செட்டி, ஆர். கே. சண்முகம் செட்டி முதலியவர்கள்.

ஒரு நாட்டிற்குக் கஷ்டம் ஏற்படும் காலத்தில்தான் இத்தகைய திறமைமிக்க பேச்சாளர்கள் தோன்றினார்கள் என்று சொல்லலாம். சாதாரண காலங்களில் தீவிரமாகப் பேசவேண்டிய அவசியம் ஏற்படுவது இல்லை. சென்ற ஐம்பது அறுபது வருட காலங்களில் ஆங்கிலப் பாராளும் மன்றத்தில் அலங்கார, ஆரவாரமில்லாத, விஷயத்தை ஒட்டிய பேச்சுக்களே (Matter of Fact Speeches) நிகழ்த்தப்பட்டிருந்தன. ஏனென்றால் காலத்தை வீணாக்காமல் கருத்தை ஒட்டிய பேச்சினால்தான் காரியம் நடைபெறும்; முக்கியமான அநிக சட்டங்கள் நிறைவேற்ற முடியும் என்பதனால்தான் காரியார்த்தமான பேச்சுக்களே பேசப்பட்டு வந்தன.

மேடைப்பேச்சுக்குச் சிலவிதிகள் உண்டு. பேச்சாளர் விஷயத்தைத் தெளிவாகவும், சுருக்கமாகவும், விளக்கமாகவும் (Clear, Concise and tothe Point) பேசவேண்டும். சிலர்பேசும் பொழுது தங்கள் மனத்தில் உள்ளதை மறைத்தே பேசுகிறார்கள். அவர்கள் தங்கள் கருத்துக்களை கொலை செய்பவர்களென்றே கூறலாம். தங்களைக் கெட்டிக்காரர்களென்று பிறர் நினைக்கவேண்டுமென்று சிலர் பேசுகிறார்கள். அத்தகையோர் பேசும பொழுது அவர்கள் என்ன பேசுகிறார்களென்பதை ஜனங்கள தெரிந்துகொள்ள முடியாமற் போகிறது. நன்றாகப் பேசினார்களென்பதைத்தவிர என்ன பேசினார்களென்பதைச் சொல்லமுடிவதில்லை. பேசியவர்களைக் கேட்டாலோ அவர்கள் கூறியும் அதேகதிதான். என்னபேசினார்களென்பதை அவர்களாலும் குறிப்பிடமுடியாமற்போகிறது. சிலர் நீண்டநேரம் பேசினால்தான் அது பேச்சாகுமென்று நினைக்கிறார்கள். சிலவருடங்களுக்குமுன் ஏதாவது ஒருகூட்டத்திற்கு நான் தலைமைவகிக்கும்படி நேர்ந்தால், உள்ளூரவாவது என்னைத் திட்டாமலிருந்த தமிழ்ப் பேச்சாளர்களே இருந்திருக்க மாட்டார்களென்றே நினைக்கிறேன். காரணம், நான் பேச்சின் நேரத்தை நிர்ணயிப்பதுதான். அரைமணிநேரம்தான் பேசவேண்டுமென்று சொன்னால் அவர்களைக் கொலைசெய்பவனாகவே அவர்கள் என்னை கருதியதுண்டு. தூக்குமேடையில் ஏறுஎன்று சொன்னால்கூட அவர்கள் மகிழ்ச்சியுடன் ஏறச் சம்மதிப்பார்கள்; சுருங்கப்பேசவேண்டுமென்றால் பேச இயலாது என்ற பயம் காரணமாக வருத்தப்படுவார்கள். பேச்சின் இரகசியத்தை அறியாதவர்களென்றுதான் அவர்களைச் சொல்லவேண்டும். ஒருவன் பேசவேண்டுமானால் முக்கியமாக எதைப்பேசவேண்டும் என்பதைத் தீர்மானித்து விட்டால் குறித்தகாலத்தில் பேசமுடியும். அதிர்ஷ்டவசமாக வானொலி (Radio) நிலையங்களுடைய நடைமுறை நான் சொல்வதைஉறுதிப் படுத்தும். எத்தகைய சிறந்த பேச்சாளராயிருந்தாலும் வானொலியில் 15நிமிடத்துக்குமேல் பேச அனுமதிப்பதில்லை. முக்கியமாக, பேசுபவர் ஒருவர் கேட்பவர்கள் மனதில் புரியும்படியும் பதியும்படியும் இரண்டொரு சங்கதிகள் சொன்னாலே போதும் அவைகளைக் கேட்போர் சீக்கிரம் மறந்துவிடவும் முடியாது; நினைத்துப் பார்ப்பதற்கும் வசதி அளிக்கும். மேடையில் பேசமுன்வரும் ஒருவருக்குப் பேசப்படும் பொருளின் தெளிவில் பூரணநம்பிக்கை வேண்டும். அவ்விதம் பொருள் தெரிந்து பேசும்பேச்சில் மரியாதைக் குறைவான பேச்சுக்கே இடம் ஏற்படாது. கேட்பவர்களுக்கு ஒன்றும் தெரியாது என்று நினைத்துப்பேசுவது பேசுவோர்களின் அறியாமையை வெளிப்படுத்தும்.

சாதாரணமாகப் பொதுக்கூட்டம் கூட்ட வேண்டுமானால் கூட்டத்தை இரண்டுமணி நேரத்துக்குமேல் நடத்தக்கூடாது. நிகழ்ச்சி குறிப்பிட்ட நேரத்தில் தொடங்கவேண்டும். அக்குறிப்பிட்ட நேரத்திற்குள் இரண்டு அல்லது மூன்றுபேர்களுக்குமேல் பேச்சாளர்களைப்பேச அழைக்கக்கூடாது. ஒவர் கூறியதையே மற்றவர் கூறும் நிலை ஏற்படக்கூடாது. நிகழ்ச்சிகள் வெகுதுரிதமாக (Fast Moving Woold) நடைபெறும் இக்காலத்தில், ஒருமனிதனை இரண்டுமணி நேரத்துக்குமேல் இருக்கச்செய்து, கவனத்தை ஒரு முகப்படுத்தச்சொல்லி, அவனுக்குத் தெரியாததைப்பற்றியும் எடுத்துச்சொல்லி அவன் ஊக்கத்தையும் உற்சாகத்தையும் இழக்கச்செய்வது உடலையும் மனத்தையும் வருத்துவதாகும். கூட்டத்தில் உள்ள அனைவரும் எவ்விதத்தடையுமின்றிக் கேட்பதற்கு வசதியாக ஒலிபெருக்கி அமைக்க வேண்டும். கூட்ட ஆரம்பத்தில் மக்கள் மனத்தை ஒரு முகப்படுத்த துவக்கவணக்கம் சுருக்கமாகச் சொல்லவேண்டும். கூட்டஇறுதியில் கூட்டத்தினர் ஒழுங்காகவும் கட்டுப்பாடாகவும் அமைதியுடனும் கலைவதற்கு ஏதுதாக வணக்கப்பாடல் பாடவேண்டும். அதுசமயம் யாவரும் எழுந்து நின்று பாடல் முடிந்தபின் கலைந்து போதல் சிறந்த பண்பாகும்.

மதுரைத்தமிழ்ச்சங்கப் பொன்விழாமலர் 1956 ...

திருமணம் நடைபெற்று மூன்றுவாரங்கள்தான் ஆகியது. ஆனால் கணவனது முகத்தில் வாட்டம் குடிகொண்டிருந்தது. கணவன் ஏதோ கவலையோடிருக்கிறான் என்பதையறிந்த மனைவி காரணம்கேட்டாள்.

"ஒன்றுமில்லை கண்ணே! அந்தக்கவலை என்னோடுமட்டும் இருக்கட்டும் உன்னையும் சேரவேண்டாம்!"

"இன்பத்திலும் துன்பத்திலும், வாழ்விலும்தாழ்விலும் சமபங்கு கொண்டு ஒருயிரென இல்லறம் நடத்துவோம் என்றுதானே நாம் திருமணத்தின்போது உறுதியளித்தோம்."

"ஆமாம்!"

"பின் உங்களுடைய கவலை என்னுடையதல்லவா சொல்லுங்கள்! நீங்கள் ஏன் கவலையோடிருக்கிறீர்கள்?"

சரி கூறிவிடுகிறேன். நம்மீது ஒரு இளம்பெண் நம்பிக்கைத்துரோகம் செய்ததற்காக வழக்கு தொடுத்திருக்கிறாள்"

"......?"

# நனவு ஆகாத கனவு

[இரா. நெடுஞ்செழியன்]

திருமணம் செய்து கொள்வதற்கான ஏற்பாடு எதுவும் செய்யாமல், தலைவியோடு களவொழுக்கம் மேற்கொள்ளுவதிலேயே காலங் கடத்தி வருகிறான் தலைவன்.

திருமணத்திற்கான முயற்சி செய்யுமாறு தலைவனைத் தலைவி வற்புறுத்துகிறாள். திருமண முயற்சிக்குப் பொருள் வேண்டும்; பொருள் தேட வெளியூருக்குப் புறப்படவேண்டுமே என்று தலைவன் ஏங்குகிறான். பொருள் திரட்டாமல் தலைவியைத் திருமணம் செய்து கொள்ளவும் அவனால் முடியவில்லை; தலைவியை விட்டுப் பிரிந்து பொருள் தேடுவதற்காகச் செல்லவும் இயலவில்லை. என்ன செய்வதென்று தோன்றாமல் தலைவன் திகைக்கிறான். பொருள் வந்தால்தான் திருமணம் நடைபெறும்; திருமணம் நடைபெற்றால்தான் தலைவியின் துன்பம் தீரும், இல்லற இன்பம் ஏற்படும் என்று கருதிக்கொண்டு இறுதியாகப் பொருள்தேட வெளியூருக்குப் புறப்படுவது என்று முடிவு செய்கிறான்.

தன் அருமைக் காதலனைவிட்டுப் பிரிய தலைவிக்கு மனந்தாளவில்லை என்றாலும், வேறு வழியின்றித் தம் எதிர்கால இல்லற இன்ப வாழ்வை எண்ணித் தலைவனுக்கு விடைகொடுத்து அனுப்புகிறாள். தலைவனும் மிக்க வருத்தத்துடன் பிரிந்து செல்கிறான்.

தலைவனுக்கு விடை கொடுத்து அனுப்பி விட்டாளே ஒழிய, தலைவனது பிரிவால் ஏற்படும் துன்பத்தை ஆற்றிக்கொள்ளும் திறனற்றவளாக இருக்கிறாள். தலைவன் சென்று சில நாட்கள்தாம் ஆயின என்றாலும், நீண்ட நாட்கள் கழிந்துவிட்டனபோல் அவளுக்குத் தென்படுகிறது. தலைவனது வரவை எதிர் பார்த்து ஏங்கித் தவித்துக்கொண்டிருக்கிறாள். தலைவனைப்பற்றிய நினைவு அவளது உள்ளத்தை எப்பொழுது பார்த்தாலும் குடைந்துகொண்டேயிருக்கிறது. களவொழுக்கக் காலத்தில், இரவுக்குறி பகற்குறியிடங்களில், தானும் தலைவனும் பேசி மகிழ்ந்திருந்த நிலைமைகள்பற்றிய நினைவும், கண்ட காட்சிகளைப்பற்றிய நினைவும், கொண்ட கோலத்தைப்பற்றிய நினைவும் அவள் உள்ளத்தில் எழும்பி எழும்பி அடங்குகின்றன. தன் உளத் துயரத்தைத் தோழியிடம் சொல்லித், தலைவன் விரைவில் வந்து சேருவதற்கான வழிவகைகள் என்ன என்று அவளிடம் ஓயாமல் கேட்டுக்கொண்டே இருப்பாள். தோழி எப்பொழுதும் தலைவியின் அருகே இருந்து அவளுக்கு ஆறுதல் மொழிகள் கூறி, அவளது துயரத்தை மறக்கடிக்க முயற்சி செய்வாள். இப்படியாக நாட்கள் மெல்ல கழிந்துகொண்டிருக்கின்றன.

ஒருநாள் தலைவி நண்பகல் உணவுக்குப் பிறகு படுத்து இளைப்பாறிக்கொண்டிருக்கும் போது, தலைவனைப்பற்றிய நினைவுகள் அவளது கவனத்திற்கு வருகின்றன. தலைவனது ஊருக்கு அருகில் கடலின் துறைமுகம் இருப்பதும், கடற்கரையிலுள்ள மணற்பரப்பில் பெரிய பெரிய புன்னை மரங்கள் அடர்ந்திருப்பதும், அவற்றில் அரும்பி மலரும் பூக்கள் கடற்கரையிடத்து உதிர்வதும், அவை கரையிடத்து மேய வருகின்ற சிப்பிகளின்மேல் குவிவதும், அங்குள்ள சிறுகுடிசைகளிலுள்ள பரதவர்கள் கடற்சிப்பிகளைப் பொறுக்கி மகிழ்வதும், எப்பொழுதும் குளிர்ச்சிதரும் உப்பங்கழிகளை யடுத்து அழகிய சோலை விளங்குவதும், அதில் தானும் தலைவனும் ஓடி ஆடிப் பேசி மகிழ்ந்திருந்ததும் ஆன நினைவுகள் அவளுக்கு வருகின்றன. அதனால் அவள் உவகை கொள்கின்றாள். பிறகு அப்படியே உறங்கி விடுகிறாள்.

தலைவனைப்பற்றிய நினைவோடு உறக்கங் கொண்ட காரணத்தால், தலைவனோடு சோலைப் பக்கம் செல்வது போலவும், அவனோடு ஓடியாடி விளையாடுவது போலவும், அவனோடு கூடியிருந்து மகிழ்வது போலவும், இன்பத் துறையில் இனிது இருப்பது போலவும் கனவு காண்கிறாள். திடீரென்று விழித்துக் கொள்கிறாள். திகைப்புற்று எழுந்து திகிலுடன் சுற்றுமுற்றும் பார்க்கிறாள். சோலையையும் காணவில்லை, தன்னை அணைத்துக்கொண்டிருந்த தலைவனையும் காணவில்லை. தோழி அருகே படுத்து உறங்கிக்கொண்டிருப்பதை மட்டும் பார்க்கிறாள். தலைவி தோழியைத் தட்டி எழுப்பி விடுகிறாள் தோழி வாரிச் சுருட்டிக் கொண்டு திடுக்கிட்டு எழுகிறாள்.

தோழி தலைவியைப் பார்த்து, "என்னடி? என்ன நடந்தது?" என்று வினவுகிறாள்.

"ஒன்றுமில்லை!" என்று தலைவி கூறுகிறாள்.

"பின் ஏன் திடீரென்று என்னைத் தட்டி எழுப்பினாய்?" என்று தோழி கேட்கிறாள்.

"நான் கனவு ஒன்று கண்டேன்!" என்கிறாள் தலைவி.

"என்ன கனவு? ஏதேனும் அச்சமூட்டும் கனவா?"

"அல்ல! அல்ல! இன்பந்தரும் கனவு தான் கண்டேன்!"

"அப்படியானால் நீ ஏன் திகைப்பும் வருத்தமும் கொண்டவள் போல் காணப்படுகிறாய்?"

"இன்பக் கனவு இடையிலேயே முறிந்து விட்டது! நுகர்ந்துகொண்டிருந்த இன்பமெல்லாம் அழிந்து விட்டன?"

"அப்படி என்ன இன்பக் கனவு கண்டாய்?"

"நானும் தலைவனும் சோலைப்பக்கம் செல்வது போலவும், ஓடி விளையாடி மகிழ்வது போலவும், கூடி மகிழ்வது போலவும் கனவு கண்டேன். எல்லாம் ஒரு நொடியில் அழிந்து போய்விட்டன?"

"அதனால் என்ன? நீ கனவுகண்டவரையில் உனக்கு இன்பந்தானே?"

"நம்மூர் மாமரத்தில். மாமரத்தின் முட்களைப் போன்ற பற்களை வைத்துக்கொண்டு கிளையொன்றைப்பற்றித் தொங்கிக் கொண்டே துயிலும் வௌவாலைப்போல் நான் ஆகிவிட்டேன்!"

"வௌவாலுக்கும் உனக்கும் என்ன ஒற்றுமை இருக்கிறது?"

"வௌவாலானது மிக்க தொலைவிலுள்ள காட்டின் கண்ணுள்ள நெல்லிப்பழத்தின் இனிய புளிச்சுவையைத் தான் பெற்றதாகக் கனவுகண்டு கண்டு, பிறகு ஏமாற்றம் அடைவதைப்போல, நானும் கனவுகண்டு இப்பொழுது ஏமாற்றம் அடைந்துள்ளேன்!"

"எங்குள்ள நெல்லிப்பழமாக இருந்தாலும், அது வௌவாலுக்கு எப்படியும் கிடைக்கத்தான் செய்யும்; அதுபோல தலைவர் உனக்கு எப்படியும் கிடைக்கப்பெறுவர் என்பது திண்ணம்!"

"மிக்க நெடுந்தொலைவிலுள்ள, போர்பல வற்றையும் வென்ற வீரத்தையுடைய சோழற் குடியிற்தோன்றினவனை அழிசி என்பானது ஆர்க்காட்டைச்சேர்ந்த பெரிய காட்டிலுள்ள நெல்லிப்பழத்தைப்பற்றியே நான் பேசுகிறேன். அந்த நெல்லிப்பழம் இங்குள்ள வௌவாலுக்கு எப்படியும் கிட்டாதே!"

"நெல்லிப்பழம் வௌவாலுக்குக் கிட்டப் பெறுவிட்டாலும், உனது தலைவர் உனக்கு எப்படியும் கிடைக்கப்பெறவே செய்வார். அதுபற்றிய கவலையை நீ விட்டுவிடு. நீ கண்ட கனவு, உன் தலைவர் மிக்க விரைவில் வந்து விடுவார் என்பதைத்தான் உணர்த்துவதாக இருக்கிறது. எனவே எவ்வித வருத்தமும் கொள்ளவேண்டாம்!" என்று தோழி தலைவியைத் தேற்றுகிறாள்.

தலைவியும் ஒருவாறு மன ஆறுதல்பெற்று அமைகிறாள்.

இது நற்றிணை-87 ஆம் செய்யுளின் கருத்தைத்தழுவி எழுதப்பட்ட சொல்லோவியமாகும். இந்தச்செய்யுள் நெய்தல் திணையின் பாற்பட்ட 'வரைவிடை வைத்துத் தலைவன் பிரிய ஆற்றாளாய தலைவி கனக்கண்டு தோழிக்கு உரைத்தது' என்னும் பிரிவைச் சார்ந்ததாகும். இந்தச்செய்யுளை இயற்றியவர் நக்கண்ணையார் என்னும் பெண்பாற் புலவராவார். பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணை என்றும் இவரை அழைப்பர். அரசர்க்குப் பெண் கொடுக்கத்தக்க உயர்ந்த வணிக மரபைச்சேர்ந்தவர். உறையூர் வீரை வேண்மான் வெளியன் தித்தனது மகன் போர்வைக்கோப்பெருநற்கிள்ளி என்னும் சோழன், தன் தந்தையைப் பகைத்துக் கொண்டு நாடிழந்து புல்லரிசிக்கூழ் உண்டு வாழும்போது, ஆமூர் மல்லனைப் போரில் வென்றதுகண்ட இந்நக்கண்ணையார், அவ்வரசனைத் தாம் மணந்து முயங்க விரும்பித் தம் காதல் மிகுதியைக் காட்டிக்கொண்டார். அவனை அணைத்து முயங்குதற்கு அவையத்தார் காண்பார்களே என்று அஞ்சுவதையும், அவனைப் பலபொழுது காணப்பெற்றாலும் முயங்காமையினாலே தம் மேனி பசலை பூத்ததையும் பலவாறாக விரித்துக்கூறி வருந்துகின்றார். இவர் பெருநற்கிள்ளியைப்பெரிதுங் காதலித்தார் என்றும், அக்காதல் கைக்கூடப்

பெறவில்லை என்றும் தெரியவருகிறது. இவர் நெய்தல் திணையையும், குறிஞ்சித் திணையையும் சிறப்பித்துப்பாடியுள்ளார்.

இவர் பாடியனவாக நற்றிணை, அகநானூறு புறநானூறு ஆகியவற்றில் ஆறுபாடல்கள் காணப்படுகின்றன.

உள்ளூர் மாஅத்த முள்ளெயிற்று வாவல்
ஓங்கல் அஞ்சினைத் தூங்குதுயில் பொழுதின்
வெல்போர்ச் சோழர் அழிசியம் பெருங்காட்டு
நெல்லியம் புளிச்சுவைக் கனவி யாஅங்கு
அதுகழிந் தன்றே தோழி அவர்நாட்டுப்
பனியரும்பு உடைந்த பெருந்தாள் புன்னை
துறைமேய் இப்பி ஈர்ம்புறத்து உறைக்கும்
சிறுகுடிப் பரதவர் மகிழ்ச்சியும்
பெருந்தண் கானலும் நினைந்தவப் பகலே

[நற்றிணை—87

[பொழிப்புரை: தோழி! அத்தலைவரது நாட்டின்கணுள்ள பெரிய அடியையுடைய புன்னையின் குளிர்ந்த அரும்புகள் மலர்ந்து, அவை கடலின் துறையிடத்து மேய்கின்ற சிப்பியின் ஈரமாகிய வெளிப்புறத்தில் மிகவாக விழும். சிறுகுடியிலுள்ள பரதவர் மகிழும் மகிழ்ச்சியையும், பெரிய உப்பங் கழிக் கரையிலுள்ள சோலையையும் நான் நினைந்த அப்பகற்பொழுதின்கண்ணே ஊரின் உள்ளதாகிய மாமரத்திலிருக்கின்ற முள்போன்ற பற்களையுடைய வெளவால், உயர்ந்த ஒரு கிளையிற்சென்று பற்றித் தொங்கிக்கொண்டு துயிலும்போது, தனக்குக்கிட்டப்பெறாத வெல்லும் போர்களையுடைய சோழர்குடியில் பிறந்த ஆர்க்காட்டிலுள்ளவனுகிய அழிசி என்பவனது பெரிய காட்டின்கணுள்ள நெல்லிப்பழத்தின் இனிய புளிச்சுவையைத் தான்பெற்றதாகக் கனவுகண்டாற்போல நானும் அவரோடு கூடிமுயங்கியதாகக் கனவுகாண, அவ்வின்பமெல்லாம் நான் விழித்தவுடன் ஒழிந்து போயிற்று. மா—மாமரம்; வாவல்—வௌவால்; தாள்—அடி; இப்பி—சிப்பி.]

தலைவன் பிரிந்து வெளியூர் சென்றிருக்கும் போது, தலைவி தலைவனைப் பற்றிக் கனவு காண்பதும், கனவில் இன்பம் பெறுவதும், அக்கனவு நீங்கியவுடன் ஏக்கங்கொண்டு வருந்துவதும், தோழி அவளுக்கு ஆறுதல் மொழிகூறித் தேற்றுவதும் காதல்வாழ்வில் மிக முக்கியத்துவம் பெறுகின்றன.

கடற்கரைப்பக்கத்தின் இயற்கை எழில் இச்செய்யுளில் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது.

வெளவாலின் பற்களுக்கு மாமரத்தின் முட்களை உவமை கூறியிருப்பது அறிந்து மகிழத்தக்கதாகும்.

நெல்லிப்பழத்தின் புளிச் சுவையை நினைந்து வெளவால் கனவுகண்டுகொண்டிருக்கும் என்னும் கற்பனை பாராட்டத்தக்க நயமுடையதாகும்.

புலவர், சோழன் அழிசியைத் தக்கதொரு இடத்தில்வைத்துப் பெருமைபடுத்தும் சிறப்பு பாராட்டுதற்குரியது.





# மொழி-இந்திய வரலாற்றுக்கு முன்

## குறிப்பு-1

## திராவிட மொழிகளிலிருந்து சமஸ்கிருதம் எடுத்தாண்ட சொற்கள்



(கு) மலி = அடர்ந்த காட்டுநிலம், மலைக் காடுகளில் உள்ள ஏலக்காய்த் தோட்டம்.

(துளு) மலே - காடு, காடடர்ந்த குன்று

(தெ) மலா - மலை.

(கொ) மாலீ - குன்று

(பா) மலாங் - காடு

(பி) மாஸ் -:குன்று, மலை.

(ச) மாலயா - மலபாருக்கு எல்லையாக உள்ள மேற்கு மலைத்தொடர்கள்.
நந்தவனம் (புராணச்சொல்)
தோட்டம் (அகராதிச்சொல்)
மாலா - கிராமத்திற்கு அருகாமையிலுள்ள காடு, வயல்.

சமஸ்கிருதச் சொற்றொகுதி செய்தவர்களும், செய்கின்றவர்களும் 'மலயா' என்ற சொல்லை 'மல்' என்ற புனைசொல்லில் இருந்து பெறுவதாகக் கூறுகின்றனர். மலைப்பகுதியில் சந்தனம் அதிகமாக இருப்பதாற்போலும் 'மல்' என்ற சொல்லிற்கு 'உடைய', 'வைத்திருக்கிற' என்ற பொருள் தரப்படுகிறது! மேகதூதம் என்ற காளிதாசன் நூலில் வரும் 'மாலா' என்ற சொல்லிற்குப் பொருள் கொள்வதில் உரையாசிரியர்கள் வெவ்வேறு மாறுபட்ட பொருள்களைக்கற்பிக்கின்றனர். ஒருசிலர் 'மாலா' என்ற சொல்லிற்கு 'வயல்', 'நிலம்' என்ற குறிப்பிட்ட பகுதிகளைக் குறிக்கும் சுட்டுச்சொல்லாகவும், வேறுசிலர் பொதுச் சொல்லாகவும் பொருள் கொள்கின்றனர். திட்டவட்டமான பொருள் கொள்வது கடினமாயினும் நாம் எடுத்துக்கொண்ட பொருள் காளிதாசன் பாட்டிற்கும் பொருந்தும்.

(9) (த) ஐய்ய - வியப்பு, இரக்கம் எனப் பொருள்படும் விளிக்குறிப்பு.

ஐய்யகோ - இரக்கம், இடுக்கண் எனப்பொருள்படும் விளிக்குறிப்பு.
ஐ (அய்) - வியப்பு, திகைப்பு.
ஐயெனல் - விரைவுக்குறிப்பு, வருத்தக்குறிப்பு, உடன்படற்குறிப்பு.
ஐய்யய்யோ - இரக்கம், துயரம் இவற்றை வெளிப்படுத்தும் விளிச்சொல்.

ஐய்யோ - வியப்பு, ஆழ்ந்த துக்கம் இவற்றை வெளிப்படுத்தும் விளிச்சொல்.

(ம) ஐய்ய - இகழச்சிச் சிரிப்பு (வியப்பிடைச்சொல்.)
ஐய்யோ, ஐய்யய்யோ - துயரம், வேதனை இவற்றைக் குறிக்கும் சொல்.

(கோ) ஐய - எதிர்பாராத நிகழ்ச்சி, துயரம் இவற்றைக் குறிக்கும் விளிச்சொல்.

(து) இயா - வியப்பை வெளிப்படுத்தும் விளிச்சொல்.

(க) ஐய்யோ, ஐய்யய்யோ, ஐய்யய்யே - வியப்பு, துயரம், இரக்கம் இவற்றைக் குறிக்கும் விளிச்சொல்.

(துளு) ஐய்யோ, ஐய்யய்யோ - வேதனை, துயரம் இவற்றைக் குறிக்கும் விளிச்சொல்.

(தெ) ஐய்ய, ஐய்யோ, ஐய்யய்யோ, ஐய்யயோ - துன்பம் துயரம், இரக்கம், வேதனை

(குயி) ஏய்ஜி, ஏய்கோ, ஏய்கோஞ, ஏய்க், ஏய்க்கோ, ஏய்க்கோஞ - துயரம், பொறுமையின்மை, இடர்ப்பாடு இவற்றைக் குறிக்கும் விளிச்சொல்.

(குவி) ஏஜாலீஜோ, ஏஜாலிகர் (ஜ - ய) - அந்தோ என்னும் விளிச்சொல் லைக் குறிப்பவைகள்.

(குரு) ஐயோ, ஐயோஜி - வேதனை, விய ப்பு.

(மா) ஐய, ஐபி, ஐயு, - வியப்பு, வேதனை, இன்பம் இவற்றைக் குறிக்கும் விளிச்சொல்.
ஐயோக், ஐயோகபோக் - அந்தோ என்னும் வியப்பிடைச்சொல்.

(ச) ஐயி - எதிர்பாராதது, நினைவிற் கொண்டு கூறுவது, பயம் இவற் றைக்குறிக்கும் வியப்பிடைச்சொல். (குறிப்பாக நாடகத்தில் அதிகம்உப யோகப்படுத்தப்படுபவை)

திராவிட மொழிகளில் 'அப்பா' என்ற தென்மொழிச் சொல்லின விளிவேற்று மையாகவோ அல்லது குயி, குவி, குருக், மால்டோ என்ற மொழிகளின் 'அம்மா' என்ற சொல்லின் விளிவேற்றுமையாகவோ அல் லது அப்படிப்பட்ட விளிவேற்றுமைக்குத் துணையாகவோ, விளிவேற்றுமைச் சொல்லைத் தன்னுள் கொண்டதாகவோ இருக்கிறது. உதாரணமாக கோதம் மொழியில் 'ஐய' 'ஐவ' என்ற சொற்கள் 'தகப்பன்', 'தாய்' இவர் களைக் குறிக்கிறது. ஆனால் சமஸ்கிருதத்தில் மேற்கூறிய சொற்றொடர்பு இல்லை. இந்தோ-ஐரோப்பிய சொல் வரலாற்றில் காணும் வியப்பிடைச்சொற்களாவன :

கிரேக்கம் - ஏ, அய், ஆ, அய்யி
லித்து - அய், ஏய்
சொ்மனி - ஏய்
சமஸ்கிருதம் - இ, அய்.

மேற்கூறப்பட்ட இந்தோ-ஐரோப்பியச்சொற் களைக்காட்டிலும் திராவிடச் சொற்களின் உரு புகள் அதிகமாக வழக்கில் இருக்கின்றன. ஆதலால் திராவிட மொழிகளிலிருந்து சமஸ் கிருதத்தில் எடுத்தாளப்பட்டிருக்கின்றது என்பது நம்பக்கூடியதாகவும் சரியாகவும் தோன்றுகிறது.

(10) (த) களம், களன் - இடம், திறந்த வெளி, நெற்களம், போர்க்களம்

(ம) களம் - நெற்களம், திறந்தவெளி, போர்க்களம்.

(கோ) கள்ம் - நெற்களம், நாட்டியமாடும் இடம்.

(து) கோள்ன் - நெற்களம்.

(க) கள, கன - நெற்களம், போர்க்களம்

(கு) கள - நெற்களம்.

(துளு) கலா - மலர்ப்படுக்கை, ஒரு சது ரம், குறிப்பிட்ட ஒரு குழுவினர் கூடுமிடம்.

(தெ) கள்ளமு - நெற்களம்
களனு - போர், சண்டை, நெற் களம.

(கொ) கலவே - களத்திலுள்ள தொழிற் கூடம், நெற்களம்.

(நா) களவே - நெற்களம்

(பா) கலி

(ஒ) கலின்

(கோண்) கௌரா - புனித இடம், நெற் களம்.

(குயி) க்லாய் - நெற்களம்.

(குவி) க்ரானு, கலோமி.

(கு) ஹல் - நிலம், உழுவதற்கு ஏற்ற நிலம்.

(மா) க்வாலு - மலைப்பகுதியிலுள்ள நிலம்.

(ச) ஹ்கலா (ரிக்வேதம்) - நெற்களம், நெற்களஞ்சியம்.
ஹ்கலா (அகராதி) - இடம், பகுதி

நம்பக்கூடியதாக இந்தோ - ஐரோப்பிய சொல் வரலாறு எதுவும் இச்சொல்லிற்குக் கூறப்படவில்லை.

(11) (த) பழு (பழுப்பு, பழுத்த) - முதிர்தல் கனிதல், பொன்னிறம், முடிவடை தல், நிறம் மங்குதல், கசிவுறுதல், பழு, பழுப்பு - கனிதல், பொன் னிறமாகுதல், சருகாகுதல்
பழுனு, பழுனி - முதிர்தல், முடி வடைதல்.
பழம் - கனிந்த கனி, முதிர்ந்த கனி

(ம) பழுக்க - கனிதல், அழிதல்
பழுப்பு - கனியாதல்.
பழுப்பிக்க - செயற்கை முறையில் கனியவைத்தல்.
பழம் - கனிந்தகனி, பழுத்தபழம்.



(கோ) பழ்வ், பழ்த் - கனியாகு, வெளி யாகு.
பனு - பழம்

(து) போசுப், போசுத் - கனிந்த பம் - பழம்

(க) பனு - கனியாக்கு
பனு, பன்னு - பழுத்தபழம், கனிந்த கனி

(கு) பனுழி - பழம்

(துளு) பல்குனி, பழ்குனி - மென்மை யாக, உறுதியற்ற, வளையத் தக்க
பர்ன்துனி - சாம்பராகுதல், தல், கனியாதல் முதிர்தல்
பஜு - பாதி பழுத்த

(தெ) பண்டு - முதிர், பழமாகு.
பன்த்தா - கதிர், பழம், உற்பத்தி

(கொ) பண்ட், பண்டுத் - கனியாகுதல்
பண்டுட் - கனிந்த கனி.
பன் - பழம்

(நா) பண்ட் - கனியாகுதல்
பண்டி - கனிந்த கனி.

(பா) பண்ட் - முதிர்ந்த, கனிந்த
பர்னே - பழு, கனி
பல் - பழுத்தபழம்.

(ஒ) பர்ஜ் - க்னிதல்

(குவி) பண்டு - பழுத்த பழம்

(குரு) போன்னு (பாஞ்சா) - பழு, பொன் னிறமாகு
பஞ்கா - பழம்

(மா) பேனே - பழுத்த
பேன்ஜெக், பேன்ஜெகி - பழு

(ச) பலா (ரிக்வேதம்) - பழம்
பலதி (காவியம்) - தாங்கு, உற்பத்தி செய், பழுத்த

எடுத்தாளப்படும் சொல் என்ற ஊகம், இந்தோ- ஐரோப்பிய மூலச்சொல்லான 'வீக் கம்', 'வெடித்தல்', என்றவைகளும் அதன் உருபுகளுமான சொற்களைவிட தெளிவான தாக இருக்கிறது என்று தெரியவருகிறது.

(12) (த) வல் - வலிமை, திறமை, வலுக்கட் டாயமாக.
வலம், வல்லம் - வலிமை, சக்தி, வலப்புறம், வெற்றி, சிறப்புரிமை, வல்லவன், வலவன், வல்லான், வல்லாழன் - வலிமையுடையவன், சக்திவாய்ந்த மனிதன்.
வலு, வலி - திறமையுடைய, வலிமையுடைய, சக்தியுடைய.
வலிவு, வலிந்து, வலிப்பு, வலித்து - வலிவுடனிரு, சக்தி யுடனிரு, கட்டாயப்படுத்து.
வலிமை - திறமை, சக்தி, கடினம்.
வலிய - சக்திவாய்ந்த, பெரிய.
வலு - சக்தி, திறமை, வலிமை.
வலுப்பு, வன்பு, வன்மை - கடின மான, சக்தியான.
வலுமை - சக்தி, வலிமை.
வலக்கை, வலான்கை - வலதுகை

(ம) வல், வலு, வலிய - சக்திவாய்ந்த, திறமையான, பெரிய
வல்லு - சக்தி, திறமையாயிரு
வலிப்பம், வலிம - பெரிய, உயர்ந்த.
வலியே - விரைவாக, கட்டாயமாக.
வலம் - வலதுபக்கம்.
வலங்கை - வலதுகை.

(கோ) வல் - சக்திவாய்ந்த, மிகவும், வலது.
வல்கே - வலதுகை.
வல் - ஏமாற்றுவதில் சிறந்தவன்.
வல்க் - பருத்த, கடினமான, பெரி தாக.

(து) பாச் - வலது
பாச்கோய் - வலதுகை.
பாலி - வலிமையடைதல்.

(க) பல், பலி - வலிமையாகுதல், கடின மாகுதல், வளருதல்
பல், பலு, போலு - சக்தி, கடினம், பெரிய, அதிகமான.
பலா - வலது
பலாகே, பலாகைய் - வலதுகை.
பலுமே, பல்மே, பலுகு, பல்பு - சக்தி திறமை.

(கு) பலா - வலிமை, திறமை.
பலாதி - வலதுகை.
பலேயே - பெரிய.

(துளு) பல - வலிமை.
பலத்து - வலப்பக்கம்.
பலத்தகை - வலதுகை.
பலப்பினி - வலிமைபெறு, உடல் நலம் பேணுதல்
பலிகே - வலிமை, வெற்றி, கடி னம்.

பலிமே, பலுமே, பல்மி - சக்தி, வலிமை.
பலு - மிகப்பெரிய, உயர்ந்த, கடினமான

(தெ) வலாடி - புத்திக் கூர்மை வாய்ந்தவன், திறமைசாலி.
வல - வலது.
வல செய்யி - வலதுகை.
வலடு - அதிகமான.
வலனு - திறமை, உயர்வு.
வலமு - பருத்த, பெரிய
வலூதா - பருத்த, பெரிய.
வல்ல - கூடிய.
வல்லடி - வல்லடிவழக்கு, எதிர்ப்பு

(பா) வெலாகே - வலதுகை.

(கோண்) வெளலீ - அதிக

(குவி) பிராயு, பலாயுகதி - வலிமை.

(குரு) பலே, பலேதி - உதவியுடன்

(ச) பலா (ரிக்வேதம்) - திறமை, சக்தி, வலிமை.
பலேனு, பலாதாஸ் - அதனல்.

'வ' சொற்கொண்ட மொழிகள் முதன்மையானவை; 'வ' ▷ 'ப' கன்னடமொழியில் கி. பி. 9ம் நூற்றுண்டில் வழங்கியது. துணைமை அல்லது உருபுச்சொல்லான 'ப' எனற திராவிடத்திரிபுச் சொல்லிலிருந்து சமஸ்கிருதம் எடுத்தாண்டிருக்கவேண்டும். ரிக்வேதத்தில் குறிக்கப்பட்ட 'வலா' என்ற யமனின் பெயர் 'வலிமையுடையவன்' என்ற பொருள் தருகிறது என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

13. (த) மாலே-ஆரம், கழுத்துமாலே, கோர்க்கப்பட்டது, மலர் கோர்த்தது.
மலே (புறநானூறு)-அணி, உடுத்து.

(ம) மாலா - மாலே ஆரம், கழுத்தணி, கழுத்துமடிப்பு

(க) மாலி - மலர் ஆரம், மாலே, கழுத்தணி

(கு) மாலி - கழுத்தணி, ஆரம், கழுத்து மடிப்பு

(துளு) மாலே - மாலே, மலர் ஆரம், கழுத்தணி.

(தெ) மாலா

பர்ரோ வின் கூற்றுப்படி தமிழ்மொழியில் 'மாலே' என்றசொல் பழம் பெரும் இலக்கியமான புறநானூற்றில் காணப்படுகிறது. 'மலே' என்ற வினைச்சொல், குறில் உயிரெழுத்துடன் 'மாலே' என்ற பெயர்ச்சொல்லினின்றும் பெறப்பட்டது. கன்னடமொழிச் சொல்லான 'மாலி', சமஸ்கிருதத்தில் இருந்து எடுத்தாளப்பட்ட சொல் அல்ல, ஆனுல் சமஸ்கிருதத்திலும் கன்னடமொழியிலும் இதேசொல் இருக்கிறது என்று கன்னட இலக்கண அறிஞர்கள் கூறுகின்றனர். மலேயாளம், குடகு மொழிகளில் வழங்கும் 'மாலா', 'மாலி' என்ற சொற்களும் 'மாலே' என்றசொல் திராவிட இனத்தைச் சார்ந்தது என்பதற்குச் சான்றுபகர்வனவாக இருக்கின்றன.

## குறிப்பு 2.

# முண்டா மொழிகள்.

முண்டாமொழிகளிலிருந்து இந்தோ-ஆரிய, திராவிட மொழிகளால் எடுத்தாளப்பட்ட சொற்களே அடையாளம் கண்டு பிரித்தெடுக்கும் முயற்சியில் 1920-30ல் பல அறிஞர்கள் முயன்றுர்கள். அவர்களில் ஜே. பிரிஸ்லுஸ்கியும், சுனிதிகுமாரும் குறிப்பிடத் தகுந்தவர்களாவர். பேரவாக்கொண்ட எப். பி. ஜே. கூய்ப்பர் 1948-ம் ஆண்டு "சமஸ்கிருதத்திலுள்ள முண்டா மொழியின் மூலஎழுத்துக்கள்" என்ற புத்தகத்தை வெளியிட்டார். பல்வேறு அறிஞர்களால் தெரிவிக்கப்பட்ட கருத்துக்கள் எடுத்தாளப்பட்ட சொற்கள் என்றுமிரட்டும் வகையில் இருந்தபோதிலும் வேறுபல காரணங்கள் உள்ளிடுவதால் பழமைபபற்றுளர்களான சில அறிஞர்கள் தயக்கம் கொள்கின்றனர்.

முதலாவதாக, முண்டா மொழிகள் புலமை பெற்றுத்திகழவில்லே. பேரவாவின் காரணமாக இலக்கணமும் அகராதியும் சந்தாளி (Santali), முண்டாரி (Mundari), சவரா (Savara) என்ற முண்டா மொழிகளில் வெளியிடப்பட்டிருக்கின்றன. சமயப் பரப்பாளர்களும், கல்விகற்பிக்கும் பணியில் ஈடுபட்டவர்களும் எடுத்துக்கொண்ட அளவிற்கு மீறிய முயற்சியின் முடிவாக வெளியிடப்பட்டவைகள் தான் மேற்கூறியவைகள். தற்பண்பு சார்ந்த சிக்கல்கள் அதிகம் உடைய குடும்பத்தைச் சார்ந்த இந்த மொழிகள் கலேத்தொழில் வாணர்களின் ஆய்வுக்கு ஏற்ற பகுதிஅல்ல. மொழி முதலில் சேர்க்கப்படும் எழுத்து அல்லது அசை, உறுதியாக இணைக்கப்படும் சொல், பின்னிணைப்புவிகுதி இவைகளின் பரப்பு அதிக அளவில் இருப்பதால் மொழிகளின் விரிவுரையும் ஒப்புமையும் காண்பது கடினமாக இருக்கிறது. தகுதியுள்ள விரிவுரை



பல்வற்றிற்குப் பெறும்வரையில் எடுத்தாளப்பட்ட சொற்களின் ஒப்புமையும், பிறப்பு மரபு ஒட்டி உறவு கூறப்படும் இனமொழிச் சொற்களும் துணிந்து கூறப்பட்டவையாகத்தான் இருக்குமேயன்றி வேறு அல்ல.

ஐயுறவாகக்கூறப்படும் இரண்டாவது காரணமாவது: முண்டா மொழிகளிலிருந்து இந்தோ-ஆரிய மொழி எடுத்தாளும் சொற்கள் பற்றிக் குறிப்பிடும்பொழுது, முண்டா மொழிகள் பற்றிக் குறிப்பிடாமல் டபிள்யூ ச்மிட்த் பாதிரியாரின் ஆஸ்ட்ரோ - ஆசிய அல்லது ஆஸ்ட்ரிக் பற்றி அதிகம் குறிப்பிடுகிருர்கள். முண்டா, கறியா, மான்குமேர் முதலிய மொழிகள் தென்கிழக்கு ஆசியாவின் பல்வேறு மொழிகளுடன் சேர்ந்து ஆஸ்ட்ரோ-ஆசியாடிக் இன மொழிகள் என்னும் பெயரையுடைய ஒருதனி இனமாகக்கருதப்படலாம் என்ற புனேகற்பனே, அறிஞர்கள் பலர் வரையறுத்த இந்தோ-ஐரோப்பிய, பின்னோ-உகிரிக், டர்கிக், பந்து, மலேயா-பாலினீசியன், அல்கான்குயின் அல்லது அத்தபாஸ்கன் என்ற பல பிரிவுகளேப் போன்ற ஒன்று என்ற அளவில்தான் கொள்ளமுடியும். இவற்றுடன் ஒப்பிட்டுப் பார்க்குங்கால் ச்மிட்த் கைக்கு கிடைத்து அவர் உழைப்புடன் வெளிவந்த முடிவுகள் தவறுதலாகவும், நனறுகப்பகுத்துப் பார்க்கப்படாமலும், சரியாக பதிப்பிக்கப்படாமலும் இருக்கின்றன. சில ஒத்து இருப்பது போல் தோன்றியபோழ்தும், தோறறத்திற்குமேல் இசைந்து வரும ஒலி முறையை ஒட்டி ஆராய்ச்சிகள் எதுவும் செய்யப்படவில்லே. இப்பகுதியில் சொல்வரலாற்றைக் காட்டிலும் தற்செயலாகத்தென்படும் ஒற்றுமை இன்றும் காணக்கிடக்கிறது. ஆஸ்ட்ரோனேசிய மொழிகளின் ஒட்டுறவுகொண்டு ஆஸ்ட்ரிக் இன மொழிகள் என்ற தனி இனம் கற்பிக்கும் பொழுது இந்த நம்பிக்கையின்மை விரிவடைகிறது. பழம்பொருள் ஆராய்ச்சியாளர்கள், வரலாற்றுசிரியர்கள், வரலாற்றுக்காலத்துக்கு முன்னேயோர், மனித இன வேறுபாட்டு நூலாசிரியர்கள் முதலியவர்கள் தெற்கு ஆசியாவைப் பொருத்தவரை ச்மிட்த்தின் புனேகூற்றிலிருந்து மிகப்பெரிய புனேகற்பனேகள் செய்திருக்கின்றனர். ஆனுல் மொழியாரய்ச்சித்துறை வல்லுநர்கள் ச்மிட்த் கூற்றின் வலுவற்ற அடிப்படையை உற்றுநோக்கி அதன்மேல் கற்பனேக்கட்டிடம் எழுப்பாது இருத்தல் அவசியமாகிறது.

முண்டா மொழிகளிலிருந்து இந்தோ-ஆரிய மொழி எடுத்தாண்டிருக்கும் சொற்களின் அடையாளம் காணும்பொழுது ஆஸ்ட்ரிக் மூலப்பொருள்கள் அதிக அளவில் பயன் படுத்தப் பட்டிருக்கின்றன. ஆஸ்ட்ரிக் சொற்றெடர்களும், தப்பான பதிப்பில் கிடைக்கப்படும் ஒருசில முண்டா மொழிச் சொற்களும் எடுத்தாளப்பட்ட சொற்களின் அடிப்படை அல்லது மூலாதாரச்சொல் என்று சுட்டப்படுகிறது. கூய்ப்பர் தன் நூலின் அறிமுகத்தில் அவர் பின்பற்றியவழி குறித்துக்கீழ் காணுமாறு கூறுகிருர். இதைக்கவனிக்குமிடத்து எவ்வளவு இடர்ப்பாடுடையை துணிகரத் திட்டம் இது என்பது புலனுகும்.

"ஆஸ்ட்ரோ-ஆசிய மெய்யெழுத்து முறை மிகக்குறைந்த எழுத்துக்களுடனும் எஞ்சியவை அனுபவத்தால் அறியப்பட வேண்டியவைகளாகவும் இருக்கின்றன. உதாரணமாக,

$$\frac{\text{d - t — dh - th — r — j - c,s}}{\text{d - t — dh - th— r — z - s}}\text{—y—i}$$

"மேற்கூறிய எழுத்துக்கள் எல்லாம் சேர்ந்து முதன் முதலில் ஒரே எழுத்தாக இருந்தன."; "ஆஸ்ட்ரிக் இனத்திலிருந்து மூக்கினுல் ஒலிக்கின்ற மெல் எழுத்துக்களான மெய்யெழுத்துக்கள் சில முண்டா மொழிகளினுல் மாபுரிமையாக்கப்பட்டுள்ளன."; "உயிரெழுத்துக்கள் பெரும்பாலும் ஒன்றுக்கு ஒன்ருக மாற்றக்கூடியவை......ஒரே மூலம் ஒன்றிலிருந்து பிறந்த சொற்கள் அடிக்கடி அதிகமான அளவில் வேறுபட்ட உருவங்களாக இருக்கின்றன; உதாரணமாக (சமஸ்கிருதம்) 'துந்தா', 'கங்கு' என்ற இருசொற்களுக்கும் அலகு என்ற பொருள். தாத என்ற சொல்லிலிருந்து வேணி, கபரி; வாதா என்ற சொல்லிலிருந்து ஆபிதா என்ற சொல்,......ஆராய்ச்சித் துறையில் இது மிகக்கடினமாக இருப்பதற்குக் காரணம் யாதெனில் இயந்திரம் போல் வெறும் ஒலிவிதிகளே மட்டும் உபயோகிப்பதின் மூலம் எல்லாவற்றையும் விளக்கிக் காட்ட முடியும் என்று நான் நினைக்கிறேன்." உயர்ந்தவிதிகள் இவைகள்தான் என்றுல்நாம், வால்ட்டேர் காலத்திற்குச் செல்லவேண்டியிருக்கும். 'எல்லாவற்றையும் விளக்கிக் காட்ட முடியும்' என்ற உண்மையைக்கூறி கூய்ப்பர் திகைப்பதில் வியப்பில்லே. துர்ப்பாக்கிய வசமாக, முண்டா மொழிகளிலிருந்து இந்தோ- ஆரிய மொழிகள் எடுத்தாள்வதாகச் சொல்லப்படும் எல்லாச் சொற்களும் திகைப்பூட்டுவனவாகவே இருக்கின்றன. மேலும் ஆஸ்ட்ரிக் மொழிகளின் உருபுகள் பெரும்பாலும் மொழி முதலில் சேர்க்கப்படும்

எழுத்து, உறுதியாக இணைக்கப்படும் எழுத்து இவைகளைச் சார்ந்து இருக்கின்றன. போது மான அளவு ஒப்புமை முறையில் மேற்கூறிய கருவிபற்றி அதிகம் தெரியவில்லை. வார்த்தை கள் பிரிக்கப்பட்டு, முதலில் சேர்க்கப்படும் எழுத்து, உறுதியாக இணைக்கப்படும் எழுத்து என்று சொற்களை வகைப்படுத்தும் முயற்சி யில் வார்த்தைகள் பிரிக்கப்பட்டு சொல்முத லில் சேர்க்கப்படும் எழுத்து, உறுதியாக இணைக்கப்படும் எழுத்து என்று தன்போக் காக விலக்கப்பட்டால், மேற்கூறிய மொழி நூல் முறையும் உருபுகளும் அதிகம் நம் பிக்கையூட்டுவனவாக இருக்க முடியாது. இருந்தபோதிலும் எற்கனவே செய்யப்பட்ட வேலைகளிலிருந்து ஒரு சில தெளிந்த சொல் வரலாறுகளை ஐயப்பாட்டிற்கு இடமின்றி அதன் அழிவிலிருந்து காப்பாற்ற முடியும். ஆனால் இவற்றை அடையாளம் கண்டுபிடிப் பது எப்படி என்பது எனக்குத் தெரியவில்லை.

இவ்வாராய்ச்சித் துறையில் நுட்பமும், ஆழ்ந்த அறிவும், சம்பந்தப்பட்ட மொழிகளின் கூறுபாடும் மிக விரும்பத்தக்கதும் தேவைப் பட்டதுமாகும் என்பது மேற்கண்ட முண்டா, ஆஸ்ட்ரிக் மொழிகள்பற்றிய சிறு ஆராய்ச்சிக் கட்டுரை தெளிவுபடுத்துகிறது. குறிப்பிட்ட குறைகள் நிறை செய்யப்பட்டால்தான் ஒப் புமை ஆராய்ச்சிக்கு வழிஏற்பட்டு, ஏற்கனவே இந்தோ-ஆரிய, திராவிடமொழிகளுக்கு இருப் பதைப்போல வரலாற்றுக்கு முந்தைய மொழி பற்றி அறியமுடியும்.

[முர்ரே. பி. எமனோ கலிபோர்னியா பல் கலைக் கழகத்தில் வடமொழிப் பேராசிரிய ராகப் பணியாற்றுகிறார். இந்திய மொழி கள் பற்றி ஆராய்ச்சிகள் பல செய்திருக் கிறார். வடமொழி கடவுளர்மொழி, எந் தையர் தம் முந்தைய மொழி எனப் புகழ் பாடும் பண்டிதர்களுக்குக் காணிக்கை யாக்க, வடமொழிப் பேராசிரியர் எமனோ பிலெடெல்பியாவில் உள்ள அமெரிக்கத் தத்துவக் கழகத்தில் வாசித்த ஆங்கிலக் கட்டுரையை, Tamil Culture என்ற ஆங் கில இதழில் வெளியிட்டுள்ளதனை தமிழ்க் கலை மன்றத்தினரின் இசைவுபெற்று வெளியிட்டுள்ளோம். மொழி பெயர்ப்பு தோழர் செல்வன்]

—ஆசிரியர்

## அணுவின் உருவம்

அணு என்பது பொருள்களின் பிரிக்க இயலாத கடைசிப்பகுதி என்ற கொள்கை உடைக்கப்பட்டு, அணுவைப் பிளக்கலாம் என்பது உறுதியாக்கப் பட்டுவிட்டது. தற்போது அணுவின் உருவத்தைக் காண்பதிலும் மனிதன் வெற்றி பெற்றுள்ளான்.

வரலாற்றில் முதல் தடவையாக திடப்பொருளின் (டங்ஸ்டன் என்ற பொரு ளின்) மேற்பரப்பிலுள்ள தனி அணுக்கள் படம் பிடிக்கப் பட்டிருக்கின்றன. டங்ஸ் டன் அணுவின் குறுக்களவு சுமாராக அங்குலத்தின் பத்துலட்சத்தின் ஒரு பகுதி யில் ஆயிரத்தில் ஐந்து பாகமாகும்.

பென்சில்வேனியா மாநில பல்கலைக்கழக இயக்கவியல் பேராசிரியரான டாக்டர் எர்வின் முல்லர் (Dr. Erwin W. Muller) என்பவரால் இந்த அணுப்படம் பிடிக்கப்பட்டிருக்கிறது.

50 லட்சம் மடங்கு பொருளைப் பெரிதாக்கிக் காட்டவல்ல நுண் நோக்காடி (Micros cope) யின் நிறைவே அணுவின் உருவத்தைக் காட்டச் செய்திருக்கிறது.

டாக்டர் முல்லரின் திகைக்கச் செய்யும் இந்த வெற்றியானது, பொருள் களின் மேற்பரப்பில் படிந்துள்ள படலத்தின் ஆராய்ச்சிக்கு வழி கோலும்.



# ★ மரண சாசனம் ★

(அருணன்)

இருளும் அமைதியும் ஒருங்கே ஆட்சி செய்துகொண்டிருந்தது. அந்த அமைதியின் நடுவே வேதனையின் பயனால் முனகிக்கொண் டிருக்கும் நோய்வயப்பட்டோர் சிலரும்—அவர் களுக்காகவும்—தங்கள் அலுவலுக்காகவும் விழிப்புடன் தோழமைகொண்டிருப்போரும் ஒரு சிலர். இவர்களை உள்ளடக்கித் திகழ்ந் தது மருத்துவமனை. அங்கிருப்போருள் மிகப் பலருக்குத் 'தங்கள் உடல் நலம் பெற்றுவிடும்' என்ற நினைப்பைவிட, தங்கள் நிலையிலிருந்தே மரணத்தை எட்டிப் பிடித்தவர்களின் எண் ணங்களே மிகவாக இருந்து வந்தது. இவர் களுள் ஒரு தனி மனிதர். அவர் அங்குவந்து ஏறத் தாழ மூன்று மாதங்களுக்கு மேலா யிற்று. அவருக்கு உற்ற நோய்வந்து 'உணவு வெறுப்பு' இது சாதாரண வாழ்க்கையினருக்கு மிக வசதியாயிருக்குமே எனத் தோன்றின லும், அதுவே நோயாக மாறிவிடும்போது அதனைப் போக்கிக்கொள்ளப் பெருமுயற்சி யல்லவா வேண்டியிருக்கிறது. அதேபோல் அந்த மருத்துவமனைக்கு அவர் வந்தநாள் முதல், அவர் நோய் தீர்வதும் வளர்வதுமாக இருந்துவந்தது. அதற்குக் காரணம், அவர் வார்டுக்குவரும் மருத்துவர் ஒருவரின் திறமை யினால், அவர் அந்த வார்டிலிருக்கும்வரை நோயின்றி யிருப்பார். அந்த வார்டை விட்டு அவர் மாறியது முதல் மீண்டும் அவர் முறை வரும்வரை நோயின் உயர்வுதானிருக்குமே தவிரத் தணிவு ஏற்படாது. இவ்வாறாக நோயின் தாக்குதலுக்கு உழலும் பந்தாக இருக்கும் அவர், ஒருநாள் விடுதியினின்று வெளியேற்றப்பட்டார். "ஐய்யா! நீங்கள் வந்து மூன்று மாதங்களாகிவிட்டன. இனியும் உங்களை இங்கு வைத்திருக்க முடியாது. எனவே நீங்கள் போகலாம்" என்று கூறி விட்டனர்.

வறுமைக்குத் தன் இளமையைப் பலி கொடுத்து, பல குழந்தைகளுக்குத் தாயாகி, அவை ஒவ்வொன்றையும் ஆண்டுக்கொன்று கச் சாவின் கையிலும் ஒப்படைத்துவிட்டு, மீதியாக இரண்டு குழந்தைகளை மட்டும் சொந்தமாகக்கொண்டு மகிழ்ந்திருந்தாள் அவர் மனைவி. அன்று மாலையில் தன் கணவனை— மரணப்பாதையில் முதலடிவைத்துவிட்டவரை அழைத்துக்கொண்டு வெளியேறினாள். வெளி யேறுவதன்முன் 'இன்னும் நாற்பத்தெட்டு மணி நேரங்களே உன் கணவர் உயிருடன் இருப்பார்'' என்று மருத்துவர் கூறுவதையும் கேட்டுக்கொண்டு விம்மலும் கண்ணீருமாக வெளியேறினாள். மருத்துவர் கூறியதைக் கேட் டிராவிட்டாலும், தான் இனி சிலநாட்கள்கூட உயிருடனிருக்க முடியாது என்ற உறுதி அவ ருக்கு ஏற்பட்டிருந்தது. கணவருக்கு நடக்க முடியாத நிலை. அந்த நிலையிலும் அவரை ஒரு வண்டி வைத்துக்கொண்டு அழைத்துச் செல்வதற்கும் வகையற்றவளானாள். கணவ னின் உடன் பிறந்த தங்கையின் வீடு அண் மையிலேயே யிருந்தது. அங்கே அழைத்துச் சென்றாகிலும் இடம் கேட்கலாமே என்று அவள் ஏழை உள்ளம் எண்ணியது. ஏனெ னில் தங்களுக்கென ஒரு வீடு அவர்களுக்கு இல்லை. குடியிருந்த வீட்டில் குடிக்கூலிப் பாக் கிக்காக ஒரு குபேரப் பிரபு வீட்டைப் பூட்டி விட்டான். மாட்டுக் கொட்டகையின்புறம்தான் வீடு என்றாலும் அந்த வீட்டின் பெயரால் வரும் பணம் இரும்புப் பெட்டியிலே யல்லவா சேர்கிறது. எப்படி இரக்கம்வரும். ஒரு காலத் தில் பல வீடுகளுக்கு அதிபதியாகவும், பல இலக்ஷங்களுக்குச் சொந்தக்காரராகவுமிருந்த அவர், அதற்குத் தக்க தகுதியுடைய அவர் மனைவி—வளமான காலத்திலே பிறந்து வறண்ட காலத்திலும் வாடித்துளிர்த்துக் கொண்டிருக்கும் இரு செல்வங்கள் ஆகிய இவர்கள் இன்று நடுத்தெருவிலே நின்று கொண்டிருந்தனர். குழந்தைகளுக்கோ உல கின் தன்மை தெரியாது. அந்த நல்ல பெண் மணியோ ஊரவரின் கொடுஞ்செயல்களுக்குக் கூட அவர்களைக் குறைகூறி அறியமாட்டாள்- நோயால் தாக்கப்பட்டவரோ இறப்பதாயினும் இரந்து இழந்து வாழ மாட்டேனென்னுங் கருத்துடையவர். எப்படி முடியும் இந்த எத் தர்கள் உலகில் இவர்கள் வாழ. எனவே உழன்றனர். அப்போதும் கணவனின் தங்கை

வீட்டையடைந்து "அம்மா! அவர் இன்னும் இரண்டு தினங்களில் இறந்து விடுவார். அதுவரை இங்கே தங்க இடங்கொடுங்கள்" என்று கேட்டாள். கணவனுடன் கூடி மகிழ அல்ல— தன் கணவன் கிடந்து மடிய. இடம் தரப்படவில்லை. "நல்ல வீட்டில் அமங்கலம் நடப்பதா?" என்று எடுத்தேக உத்தாவிடப்பட்டது. என் செய்வாள். மனந்தோன்றிய இடத்திற்கெல்லாம் செல்ல உறுதிகொண்டாள். தன் தூரபந்துவான ஒரு முழு நரை மூதாட்டியின் வீட்டில் இடந்தரப்பட்டது. அங்கே எடுத்துச் சென்று படுக்க வைத்தாள். அணு அணுவாகப் பயணத்தைத் தொடர்ந்துகொண்டிருக்கும் கணவனைப் படுக்க வைத்துவிட்டு, மறுநாளோ அதற்கடுத்த நாளோ அறுத்தெரியப் போகும் 'தாலி'யை அன்றே விற்றுச் சாவுச் சடங்குக்கு (ஊரார் ஒப்பனை வேண்டுமே!) ஆயத்தம் செய்தாள்.

கரண்டு எரிந்துகொண்டிருக்கும் விளக்கின் சிறிய ஒளியிலே அந்த வயோதிகரின் முகம் சற்று வெளுப்பாகவே தெரிந்தது. 'சாவுக்களை' என்பார்களே அதுபோல. எதற்கும் அழுதறியாத அந்த எஃகு உள்ளம் படைத்தவரின் உள்ளக்குமுறல் கடைக்கண்ணில் நீராக வழிந்தோடியது. பரக்க விழித்தார். தன் குழந்தைகளைப் பக்கத்தில் அழைத்தார். ஆர்வத்தால் இரண்டு கைகளாலும் மருவிக்கொண்டார். ஏதும் அறிந்து சொல்ல முடியாத அந்தச்சிறார்கள் தந்தையின் கண்ணீரைக்கண்டு தாமும் கண்ணீர் விட்டனர்; கதறினர். அழாதே! அழாதே! என்று வாயுமர்த்தினர். மெதுவாகப்பேசினர். அதுதான் அவரது கடைசி—ஆனால் நீண்டபேச்சு. ஒரு தந்தை தன் மக்களுக்காகப் பேசப்படவேண்டிய பேச்சு. வாழ்க்கைக்கு வளமூட்டும் பேச்சு. அதுவரை அவர்கண்ட உலகம் அவருக்குப் புயனற்றுப்பயிற்றுவித்த படிப்பினையின் பயனை பேசசு.

என் அருமைச் செல்வங்களே!

நம் அப்பன் நமக்காக எதுவும் சேர்த்து வைத்துப்போகவில்லையே என்று வருந்தாதீர்கள். ஊரவர்கள் நாளை உங்களைப்பார்த்து 'அன்னக்காவடியின் பிள்ளைகள்' என்று உங்களை வசை சொல்லிக்காட்டக்கூடும் மக்களே! உண்மையில் நீங்கள் அன்னக்காவடியின் மக்கள்தான். ஆனால் இந்த அன்னக்காவடி உங்களுக்காகச் சேமித்து வைத்திருப்பது எண்ணத்தில் குறிப்பிட முடியாத அளவற்ற செல்வம். அதை நீங்கள் விரும்பி வேறெவரிடமும் பெறமுடியாது. காரணம் பிறரிடம் அது இல்லை என்பதால். அதனால்தான் மிக அரிதான அந்தச்செல்வத்திற்கு நீங்கள் அதிபதியாக இருக்கவேண்டும். இதுதான் என் ஆசை. அந்தச் சேமிப்பை நான் உங்களுக்கு இப்போதே தரப்போகிறேன். ஒன்றிரண்டு மூன்றென உங்கள் கையில் எண்ணத் தக்கதல்ல அது. கருத்தில், எண்ணத்தில் இருத்தத் தகுந்தது. 'பணத்தின் இன்றியமையாமை வாழ்க்கைவளம்' என்ற முறைதான் இதுவரை இருந்து வருகிறது. ஆனால் எண்ணியபடி, பணத்தால் வாழ்க்கை அமைவதில்லை. மாறாக வாழ்க்கை சிதைகிறது. அதற்கோர் எடுத்துக்காட்டு இதோ உங்கள் தகப்பன். ஆகையால் வாழ்வாங்கு வாழ உதவுவனவற்றையும் வாழ்க்கைக்குப் புகழும் பொலிவும் தருவனவற்றையும் பெறும் வகையை உரைக்கிறேன்.

மகனே! நீ இப்போது படித்துக்கொண்டிருக்கிறாயே துவக்கப்பள்ளி! அங்கே ஏழைச் சிறாரும் இருப்பார்கள். அவர்களிடையே அன்பாகப்பழகு. உன்னால் இயன்ற அளவு அவர்களுக்கு உதவிசெய். பிறகு நீ உயர்நிலைப்பள்ளியை அடையப்போகிறாய். முதல் பள்ளிக்கு இது சற்று விடுதலை தருவது போலவே உன் உணர்ச்சியிறபடும். அந்த உணர்ச்சி வயப்பட்டுவிடாதே! கூடுமான வரை வகுப்பில் அமைதியாகவும் ஒழுங்காகவும் இருக்கக் கற்றுக்கொள். உனக்குச் சற்று சலிப்பு ஏற்படும்போது ஊரவரில் ஒருசிலர் சொல்லும் வார்த்தைகள் உன் காதில விழும். அதாவது:—

"ஏழைகளுக்கு எங்கேயய்யா படிப்பு வரப்போகிறது? பணமிருப்பவர்களுக்குத்தான் படிப்பும் வளரும் பட்டமும் சேரும்" என்று பேசுவர். இதை நீ நம்பிவிடுவாய். அதன் பிறகு 'நமக்குப்படிப்பு வராது' என்ற அவநம்பிக்கையும் அயர்வும் ஏற்படும். உடனே, உன் முயற்சியின் வேகம் குறையும். ஆனால் உண்மை என்ன தெரியுமா? பணக்கார வீட்டுப் பிள்ளைகளுக்குப் படிப்பு வருவதில்லை. அவர்கள் பெரும்பாலும் பணத்தைக்கொண்டு வெற்றி பெற முயற்சிக்கிறார்கள். அவர்களும் "ஆயிரமிருந்தாலும் ஏழைப் பிள்ளைகளுக்குத்தானய்யா படிப்பு வருகிறது" என்றுதான் கூறுகிறார்கள். அது எப்படியோ ஆகட்டும் அவைகளுக்கு நீ செவி சாய்க்காதே. பள்ளிக்குச் செல்வதில் தவறாமலும் காலந் தாழ்த்தாமலும் போய்வா. யாரையும் ஏழனம்செய்யாதே! பிறர் ஏழனம் செய்வதையும் கேட்டு மகிழாதே. அப்படிப்பட்ட சந்தர்ப்பங்கள் நேர்கின்ற



போது, உன்னை ஏழனம் செய்வதையும்—இழித்துப் பேசுவதையும் கேட்டு நீ மகிழ முடியுமா என்று நீயே எண்ணிப்பார். அப்போது திருந்த முடியும். நீ நல்லவனென்று பெயரெடுக்க வேண்டுமென முயற்சி செய். அதேசமயம் பிறரைத் தீயவரென்று கூறத்தக்க நிலைக்கு ஆட்படுத்தாதே! உயர்நிலைப்பள்ளியைவிட்டுக் கல்லூரி மாணவனாகும் நிலை ஏற்படும்போது உன் தகுதி முன்னிலும் உயர்ந்து விடுகிறது. இங்கே நீ உலகத்தை ஓரளவு புரிந்துகொண்டவனாகிறாய். நான் பார்த்திருக்கிறேன் பல கல்லூரி மாணவர்களை. தாங்கள் கற்றுவிட்டோமென்ற காரணத்தால் கல்லாதாரைக் காணின் மிக இழிவாகப் பேசுகின்றனர். 'பூலிஷ்பெலோஸ்' என்று கூறி நகையாடுகின்றனர். நான் மருத்துவமனையிலிருந்தபோது கூட அங்கு பயிற்சிக்காக வந்திருக்கும் மருத்துவக் கல்லூரி மாணவர்கள் மிக மிடுக்கான முறையிலேயே நடந்துகொள்கிறார்கள். நோய் கல்லாதவனுக்குத்தானா வருகிறது. கற்றவனுக்கு வருவதில்லையா? கற்றவன் வேறு மருத்துவரை நாடிச் செல்லும்வகையுடனேயிருக்கிறான்; கல்லாதவன் திண்டாடுகிறான். இதை உணராமல் கேலிசெய்கின்றனர். உண்மையிலேயே ஒரு நிகழ்ச்சி என்னை மேலும புண்படுத்தியது. கேள் மகனே! ஒரு கிழவன் தன் பெண்ணைக் கூட்டிக்கொண்டு மருத்துவமனை வந்துவிட்டான். பாவம் அங்கே நிகழப் போவதை அவன் எவ்வாறறிவான். கிழவன் தான் சீட்டு வாங்கவும்-மருந்து வாங்கவும் உரிய இடத்தைத் தேடிப் பிடிக்க வெகு நேரமாயிற்று. படுக்கையில் புரண்டு கொண்டிருக்கும் எனக்கு அது மிகவும் வேதனையாகத்தானிருந்ததென்றாலும் நான் அழைத்துக் கூற முடியாத நிலை. அப்போதைய நிலையில் பரோபகாரத்தைவிடத் தன் கேட்டைக் குறைப்பதையே நான் விரும்ப நேரிட்டது. அவ்வேளையில்தான் நான் கருதினேன், என் மக்களை இந்நிலைக்கு ஆட்படுத்தாவண்ணம் படிப்பிக்க வேண்டுமென்று. அதனால்தான் இப்போது உன்னை எச்சரிப்பதுமட்டுமல்ல—வேண்டிக்கொள்கிறேன். உன் வாழ்வில் இதுபோன்ற நிலைக்கு ஆளாகாதே என்று. மற்றும் நீ கவனிக்க வேண்டியன; கல்லூரி மாணவர்கள் என்ற அழைப்புக்கு ஆளானவுடனேயே தங்களையே மறந்துவிடுகின்றனர் பலர். நீயும் அவ்வாறின்றி எவர்க்கும் இதம்செய்யும் இதயத்தினைய் வளர்ந்து, வாழ்ந்திரு. இதற்கடுத்த கட்டம் நீ குடும்பத்தினனாவது. உண்மையில் குடும்பம் ஒரு கட்டம் மட்டுமல்ல. கண்டமுங்கூட. கண்டமென்றால் வரும் இடையூறுகளுக்கு இடுகுறிப்பெயராகக் கூறப்படுவதையல்ல நான் குறிப்பது. அதில் யாவுமே தனி. தனியாட்சி. தனி நடைமுறை. இதற்குமுன் பிறரால் கையாளப்பட்டுவந்தவன் தன்னைத்தானே கையாண்டு கொள்ளத்தக்க தனிப்பருவம். பிறர் எண்ணத்தை நாம் தெரிந்து, நடந்ததுகடறத் தான்எண்ணுவதைச் செயல்படுத்துமோர் நிலைக்களம். வாழ்ந்தது போக-வாழவைக்கும் திறனாய்வுத்துறை அங்கே நீ எதிலும் இரண்டிரண்டாகவே பங்கு கொள்ள நேரும். ஆனால் நாவும் நெஞ்சுமட்டும் எப்போதும் ஒன்றாகவே இருக்கவேண்டும். இது உன் வளர்ச்சிக்கு ஊறு விளைக்கலாம். ஏனெனில் நாவும் நெஞ்சும் வேறுபட்டவர்களே பெரும்பாலும் நல்வாழ்வு வாழ்முடியும்—முடிகிறது. அந்தக் கூட்டத்தின் பெருக்கத்தில் நீயும் ஒருவனாக மாறாதே! வேடதாரிகள் மிகப் பலருண்டு. வஞ்சகர்கள்-வாய் வார்த்தைகளில் வல்லவர்கள்-நஞ்சினும் கொடிய வெள்ளைத் திரையினர் இவர்களெல்லாம் விளையாடும் ஒரு தனி உலகம் வாழ்க்கைப் பெருநிலம். அதில் நீ ஒரு கடை கேடியில்தான் நிற்க நேரிடும். என்றாலும் அதற்கு அஞ்சித் தகாதவற்றிற்குத் தலைவணங்கிவிடாதே! நட்பினரை ஆராய்ந்து தேர்ந்தெடு. அவர்கள் நட்பை விடாதே. உதாரணத்திற்கு என்னைநினைத்துக் கொள். நான் இந்தப் பாடத்தைக் கற்றுக் கொள்ளச் சில இலக்ஷியங்களை இழந்திருக்கிறேன். அதனாலேதான் உன்னிடம் அந்த இலக்ஷம் கிடையாது என்ற காரணத்தால், நான் கற்றறிந்து பெற்றவற்றின் பயனைத் தான் கூறுகிறேன். இன்றைய நிலைக்கு நான் வந்து விடுவேனென்று என் வாழ்நாளில் கனவுகூடக் கண்டது கிடையாது. ஊரார் கண்டு புகழத்தக்க வகையில் பொருளாலும் சூழல்களாலும் வாழ்ந்தேன். அன்று என் வாய் வார்த்தைக்கு வகை தேடி நின்றார் பலர். இன்று நான் பேசுவதைக் கேட்கக் கூடக் கூசுவர். அன்று என் சுட்டு விரலசைவுக்கு நிகழ்ந்தவை பல. இன்று பிறர் சுட்டிக் காட்டுதலுக்குக் கட்டுப்பட்டு நானிருக்கிறேன். நோயுற்றோர் பலருக்கு உதவிசெய்து அவர்கள் நலம்பெறும் வழிவகைகள் வகுத்துத் தந்தேன் நான். இன்று நோயின் மிகுதியால் கிடந்து சாகக் கூட வழிவகையற்றுத் தவிக்கிறேன். என் நட்புக்குக் காத்துக்கிடந்தோர் பலருண்டு. என்னைத் தமது நண்பனென்று கூறிக்கொள்ள நாணுவார் பலர் இன்று. இந்நிலையெல்லாம் உன் வாழ்க்கையிலும் குறுக்கிட்டுவிடக் கூடாது என்பதுதான். எவரிடமும் மரியாதையாக இரு. எதைக் கண்டும் அஞ்சாதே! கோழையாகவும் வலுவற்றவனாகவும் வாழாதே. ஊர்திகளிலே செல்லும்போது

பார்த்திருப்பாயே! தன்வரை நியாயம் பேசுவோரை; அதுபோல் செய்யாதே! உணவு விடுதிக்குச் சென்றாலும் அங்கு பரிமாறுவோருடைய உள்ளம் சுடும்படியாகச் சிலர் பேசுவதுபோல் நீயும் பேசாதே! எந்தப் பணியினராயினும் பணி ஒன்றைத் தவிர அவர்களும் மனிதர்கள்தான் என்பதை நினைவில்லை. அந்தந்தத் துறையிலிருப்பவர்களை அப்படியப்படித்தானே அழைக்க வேண்டுமென்பர். உடனே எண்ணிப்பார். மேம்பட்ட துறையினரை அவர்களுடைய துறையின் பெயரால் அழைக்க முடியுமா என்று.

எனவே இவைகளையெல்லாம் உன்வாழ்நாளின் உயிர்நாடியாகக் கருது. ஆத்திரம் வரும்போது அமைதியைத் தேடிப்பிடி. இதை மறவாதே! இது உன் தந்தையின் ஆசை இதைப் பூர்த்தி செய்வாயா?

என்று கேட்டுக்கொண்டே மற்றொருபக்கம் இருக்கும் மகளைப் பார்த்துப் பேசலானர். மகனுக்குக் கூறும்போது தந்தையின் முகத்தையும் அண்ணனின் முகத்தையும் மாறி மாறிப் பார்த்திருந்த அவள், தனக்கு ஒன்றும் சொல்லவில்லையே என்றெண்ணுவது அடிக்கடி அவள் பெருமூச்செறிவதிலிருந்து தெரிய வந்தது. அதை அறிந்துகொண்டவர்போல மகள் பக்கம் திரும்பி, சிறிது முறுவலித்து "உனக்கென்று ஒன்றும் சொல்லவில்லையே என்று எண்ணுகிறாயா அம்மா!" என்றார். அவள் தன் குற்றத்தை ஒப்புக்கொள்ள மனமில்லாமலும், ஒப்புக்கொள்ளும் தன்மையிலும் இல்லையென்றில்லாமலும் ஆமென்றில்லாமலுமாகத் தலையசைத்தாள். சொல்லாமலா போய்விடுவேனென்று தொடர்ந்து,

என் செல்வ மகளே!

உனக்குத்தான் நான் சொல்ல வேண்டியது அதிகமிருக்கிறது. ஏனெனில் நீதான் மற்றுமோர் குடும்பத்தை ஆக்கப் போகிறவள். உன்னாலும்—உன் இனத்தாலும் செய்யப்படும் செயல்களை அதிகாரத்தால் எதிர்க்கவோ, ஆணவத்தால் அடக்கவோ முடியாத செயல்கள். அதிலும் உங்கள் செயல் மேம்படுமானல் அவை போன்றவற்றை அறிஞர்களாலும்—புரட்சிக்காரர்களாலும் தத்துவ மேதைகளாலுங்கூடச் செயற்படுத்த முடியாது. சுருக்கமாகச் சொன்னல் பெண்களின் முயற்சி மட்டும் இருக்குமானல், நாட்டில் நல்லவையும் தீயவையும் விளைவிக்க முடியும். காரணம், அவர்கள் ஆண்களின் உள்ளத்தைப்பற்றி விடுகிறார்கள். செயற்றிறன் படைத்த ஆண்கள் பெண்களின் மனப்பாங்கை மீற முடிவதில்லை. ஆகையால் உனக்குத்தான் நான் நிரம்பச் சொல்லவேண்டியிருக்கிறது. இப்போது ஒன்பது வயதுச் சிறுமியாக இருக்கும் நீ, இன்னும் மூன்று நான்காண்டுகளில் கண்கவரும் வனப்புள்ள கட்டழகியாய் விடுவாய். இப்போது நீகாணும் பொருள்களும் நிகழ்ச்சிகளும் உனக்கு வேண்டாதவைகளாகவும், வெறுப்பவைகளாகவும் கூடத் தோற்றக் கூடும். ஆனல் உன் பருவத்தின்போது நீயே அவற்றை விரும்பி ஏற்க நேரிடும். உதாரணமாகச் சொல்கிறேன். பிறரின் ஆடையலங்காரங்களைக் காணும்போது 'இப்படியா இருப்பது' என்று எண்ணுவாய்; உள்ளத்தால் உறவுகொண்ட இருவர் இணைந்து செல்வதைக் கண்டால் என்ன இழிதன்மை என்று இகழக்கூடும். மேலும் மனித இனத்துக்கே உரித்தானது, தன்வரையில் நிறைவென எண்ணுவதும் — பிறரிடையே குறை காணுவதும்தான். இதனல்தான் நாகரீகவளர்ச்சி மேம்பட்டது என்பர். எவ்வாறாயினும் நீ அதனினின்று நீங்கிவிடு. படாடோபத்தைக் கண்டு விருப்போ வெறுப்போ கொள்ளவும் வேண்டாம். எளிமையைக் கண்டு அவாவும் அருவருப்பும் கொள்ளவும் வேண்டாம். உள்ளதை உயர்வாக எண்ணிக்கொள். உன் தோழியர் உன் நிலைக்குப் பழித்தாலும் பாராட்டினலும் இரண்டில்லதனிலும் மனம்பற்றிவிடாதே! அதனல் உன்னை நான் 'நிலையற்ற மனமுடையவளாய் விடு' என்று கூறவில்லை. பிறர்மொழியில் எதனையும் நீகைக்கொள்வதால் உன் வரையில் எந்தவிதப் புதுமையும் மாற்றமும் ஏற்படப் போவதில்லை. மேலும் பிறர் சொல்லுக்கு உன் மனம் பற்றுமானல் ஒரு சாரார் நட்பும்—மற்றவர் நட்பின்மையும் நேரிடும். அது என்றும் விரும்பத்தக்கதல்ல. இவை உன் சிறுமிப் பருவத்தில். அடுத்து எவ்வாறாயினும் உன் நிலை சற்று உயரக்கூடும். அப்போது நீ பள்ளி மாணவியாகலாம். பருவமும் மாறிவிடும். அந்த வேளையில் உன்னை விரும்பிக் காண்பார் தொகையும் அதிகமாகும். இங்கேதான் நீ கருத்துடன் விழிப்பாக நடந்துகொள்ள வேண்டும். ஏனென்றால் உன்னைக் காண்பவர்கள் "கண்கள் பார்ப்பதற்காகத்தானே பெற்றிருக்கிறோம்" என்று தத்துவம் பேசுபவர்கள். "அந்தப் பார்வையின் பயனல் ஏற்படும் பழுதைப் பார்க்க நேரிட்டால்" பார்வையை இழந்து விட்டவர்கள் போலப் பாராமுகமாகச் சென்று விடுவார்கள். 'இயற்கையின் தோற்றமே இன்பத்தின்விளைநில'மென விஞ்ஞானம் பேசுவர். பூக்கள் அழகாக இருப்பது வண்டு



களின் விருப்பத்தைக் கவர்ந்து வரவேற்கத்தானென்று எடுத்துக் காட்டுவர். நிலை மாறும்நேரத் தொடங்கியதும் பரிவுகூடக் காட்டமாட்டார்.

இவற்றை யெல்லாம் கேட்டு ஆணினமே பெண்ணினத்தின் பகையினமென்ற முடிவுக்கு வந்துவிடாதே. இத்தகையோரின் வளர்ச்சிக்கும், ஆடவர்தம் கருத்துக்கும் உரமூட்டுபவர்கள் பெண்கள்.

நீ வாழ இருப்பதோ நாகரீகம் முதிர்ந்து வரும் உலகில். இங்கு எல்லா வளர்ச்சிகளும் ஏற்பட்டிருப்பதுபோல, எழில் வளர்ச்சிக்கான ஏற்பாடுகள், மேம்பட்டதாக இல்லை. அவ்வகையில் மட்டும் நம் முன்னேர்களின் வழியே சிறந்தது. பவுடரும், ஸ்னேவும், மற்றும் சவர்க்கார வகைகளும் உடனே மினுக்காகவும் வெளுப்பாகவும் தோற்றமளிக்கச் செய்கிறதே தவிர, நீடித்த பயன் விளைப்பதில்லை. நம் முன்னேர்கள் மஞ்சளைப் பூசிக்கொள்ள ஏற்படுத்தினர். மஞ்சளால் குளிர்ச்சி ஏற்படுவதுடன், முகஅழகு கெடாமலும், பெரும்பான்மையும் பரு, கொப்புளம் போன்ற சிறு நோய்கள் தோற்றாமலும் இருக்கிறது. அத்துடன் விரைவில் முகத்தில் சுருக்கமோ வெளிறிப் போதலோ ஏற்படுவதில்லை. எனவே நீயும் அவ்விதமே செய். தினம், முடிந்தால் இரண்டு முறை குளித்து விடு. தலையில் எள் எண்ணெயோ அல்லது தேங்காய் எண்ணெயோ தடவிக்கொள். உன் தாயாருக்கு வாசனை மலர்களிட்டு எண்ணெய் காய்ச்சும முறை தெரியும். அதனை ஏற்பாடு செய்துகொள். பொய் சொல்லாமலிருப்பது மிகவும் நல்லது. அது உன் இளமையைவிட, வாழ்க்கையில் உன் உயர்வுக்கு உறுதுணையாகும். இவ்விதம் உன் எழிலைக் காத்துக்கொள். இந்த எழிலுக்கு ஏற்ற கணவனை நீ பெற வேண்டும். அவனுக்கு உன்னிடம் உண்மையன்பு இருக்கிறதா என்பதை நன்கு தேர்ந்து கொள்ள வேண்டும். இளமை உள்ளக்கிளர்ச்சியின் மேம்பட்ட செயலுக்குக் காதலென்ற பெயர் சூட்டப்படுகிறது. அது முற்றிலும் தவறு. காதலென்பதற்குத் தகுந்த இலக்கணங் கண்டு அதனைக் கைக்கொள்ள இயலாதெனினும், பொதுப்பட, காதல் ஏன் ஏற்பட்டது என்பதனை ஆராய்ந்து அந்தக் காரணம் தகுதியுடையதாக இருப்பின் ஏற்றுக்கொள். ஏற்றுக்கொளபவன் ஏழையாயினும் பணம் படைத்தவனாயினும் இதயம் பண்பட்டதவனை இருக்க வேண்டும். அதனைக் கண்டு தெளியும் வரை உனக்கு அமைதி வேண்டும். அவ்விதம் ஆராய்ந்து தொடங்கப் பெற்ற வாழ்க்கையிலும், தொடக்கத்திலிருக்கும் கிளர்ச்சியும் ஒற்றுமையும் நீடித்திருக்க வழி வகுத்துக் கொள்ள வேண்டும். அதற்கு இன்றியமையாதவை: வீண் சந்தேகம் கூடாது. சந்தேகத்தால் நம்பிக்கை யற்றுவிடும். நம்பிக்கையில்லையேல் ஒற்றுமையிராது. இணைந்து வாழ வேண்டிய இருவருள் ஒற்றுமையில்லையென்றல் இன்பம் எவ்விதம் நிலவ முடியும்? தன் நிலைக்கேற்றவாறு ஆளன் செய்யும் செயலில் திருப்தியும் அதனைக்கொண்டு அவனை மகிழ்விக்கும் மனப்பாங்கும் வேண்டும். இது,விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை இருந்தால்தான் இயலும். யாவற்றிற்கும் மேலாக; புறங்கூறாமையும், புறங்கேளாமையும் வேண்டும். இவறறால் சூழ், நட்பு கெட்டுவிடும். பிறரைப் பற்றி உன்னிடம் புறங்கூறுபவர் கூறுந் தன்மையும் தகுதியும் எதுவாயினும் 'பிறர்பால் கொண்ட நல்லெண்ணத்தினலல்ல' என்பதை உணர வேண்டும். இன்று பிறரைப் பற்றி உன்னிடம் கூறுபவர்கள் நாளை உன்னைப்பற்றிப் பிறரிடம் கூறுவர்; என்பதை நினைப்பாயேயானல் அவர்கள் கூறுவதைக் கேட்கும் நாட்டம் ஏற்படாது. புறங்கூறுவதைக் கேட்போரிருக்கும்வரைதான் கூறுவோரும் இருப்பர். இவற்றையெல்லாம் மறந்துவிடாதே!

இன்னும் எவ்வளவோ கூறவேண்டுமென்ற எண்ணம் இருக்கிறது. ஆனல் உடல் நிலை இனியும் பேச இடந்தரவில்லை. இதுதான் நான் உங்களுக்காக - உங்கள் உயர்வுக்காக - நீங்கள் வாடாதுவாழ ஏற்படுத்திவைத்திருக்கும்உயில் என் மரண சாசனம்.

இந்த உயிலில் கண்ட பொருள்களுக்கு யாரும் பங்கு பெற வர மாட்டார்கள். பங்கு கேட்டாலும் கொடுத்துக் குறையாது. அவர்களும் உங்களுள் ஒருவராக உயர்வுற்று வாழ்வார்கள். இனி நீங்கள் போகலாம். நான் உங்களுக்கெனச் செய்ய வேண்டியதைச் செய்து முடித்துவிட்டேன் என்ற அமைதியோடு விடுதலை பெறுகிறேன்; செல்கிறேன்.

என்று கூறியவண்ணம், தன் மனைவி வந்து நிற்பதை அறிந்து அவளை அருகழைத்து "உன் அறுப்பையோ—சலிப்பையோ காட்டி வளரும் பயிர்களை நாசம் செய்துவிடாதே" என்று ஒரே வார்த்தையைக் கூறிக் கண்மூடிவிட்டார்.

அவர் கூறிய சொற்கள்—அவர்களது வாழ்க்கையில் நெடிது நிலவி, நல்வாழ்வு நல்கி, இன்பம் பெருக்கிற்று. அவர்கள் ஒவ்வொருவர் நினைவிலும் — நிதமும் — இடைவிடாது தோற்றமளித்துக் கொண்டிருந்தது அந்த மரண சாசனம்.

# சூயஸ் கால்வாய்

### கால்வாயின் அமைப்பு

சூயஸ் என்பது மத்தியதரைக் கடலையும், செங்கடலையும் இணைக்கும் ஒரு வெட்டப்பட்ட கால்வாய் ஆகும். இதன் நீளம் 105 மைல்கள் ஆகும். இப்பகுதிதான் ஆப்பிரிக்காக் கண்டத்தையும, யூரேஷியா கண்டங்களையும் இணைத்துக்கொண்டிருந்த ஒரே சிறு நிலப் பகுதியாக இருந்துவந்தது. கால்வாய் வெட்டப்பட்ட பிறகு பெரும் நிலப்பகுதிகள் வேறு பிரிக்கப்பட்டன; பெரும் நீர்ப்பகுதிகள் ஒன்றுபடுத்தப்பட்டன.

சூயஸ்கால்வாய் அடிப்பகுதியில் 196 அடி (குறைந்த அளவு) அகலமும், மேற்பகுதியில் 510 அடி (குறைந்த அளவு) அகலமும் கொண்டது. இதன் ஆழம் 46 அடி. நீர்மட்டத்திற்குக் கீழே 35 அடி வரையில் அமுங்கிச் செல்லக்கூடிய கப்பல்களே, இதன் வழியாக எளிதாகப்போய் வந்ததுகொண்டிருக்கின்றன. இரண்டாவது உலகப் பெரும்போர் முடிந்ததற்குப் பிறகு, இதன் வழியாகச் சற்று பெருங்கப்பல்களும் போய்வருவதற்கு ஏற்ற வகையில் சிலபல செயற்திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன. 1953 ஆம் ஆண்டில் மட்டும் 22,20,00,000 சதுர அடி மண் மேற்கொண்டு தோண்டி எடுக்கப்பட்டுக், கால்வாய் சற்று ஆழப்படுத்தப்பட்டது. சுமார் 40 அடிக்குமேல் நீருக்குள் அமுங்கக்கூடிய மண்ணெண்ணெய்க் கப்பல்கள், போவதற்கு வசதியாக இருக்கும்பொருட்டு, இந்த ஏற்பாடு மேற்கொள்ளப்பட்டது.

### கால்வாயின் உரிமை

1859 ஆம் ஆண்டிலிருந்து சூயஸ் கால்வாய் கம்பெனி (Suez Canal Company) என்ற அமைப்புதான் அந்தக் கால்வாய்க்கு உரிமை உடையதாக இருந்து வந்தது. அது உலகின் பல நாடுகளின் முதலீடுகளைக் கொண்ட ஒரு கூட்டு வியாபாரக் கம்பெனியாக, எகிப்தின் இசைவின்பேரில் அமைக்கப்பட்டதாகும். அது, டுனிஷியாவில் பிரெஞ்சு நாட்டுத் தூதுவராக இருந்த பேர்டினண்ட்-டி-லெஸ்ஸெப்ஸ் (Ferdinand De Lesseps) என்பவரின் முயற்சியால் தோற்றுவிக்கப்பட்டதாகும். எகிப்து நாட்டில் அரசப் பிரதிநிதியாக இருந்த சையத் பாஷா (Said Pasha) பெர்டினண்டுக்கு மிக நெருங்கிய நண்பராக இருந்தார். எனவே கால்வாய் வெட்டிக்கொள்வதற்கான அனுமதியைப் பெர்டினண்டு அவரிடம் பெற்றுக்கொண்டார். துவக்கத்தில், சூயஸ் கால்வாய் கம்பெனிக்கு 4,00,000 பங்குகள் (Shares) திரட்டுவது என்று முடிவு செய்யப்பட்டது. அவற்றில் 2,00,000 பங்குகளை, பிரான்சு நாடு, மிகச்சில திங்கள்களிலேயே திரட்டித்தந்தது. எகிப்து அரசாங்கத்தின் சார்பாக சையத் பாஷா 96,000 பங்குகளைப் போட்டார். ஓட்டமான் பேரரசு பெரும் அளவில் பங்குகளைப்போட்டது.

1875-ஆம் ஆண்டு நவம்பர் திங்களில், எகிப்தைச்சேர்ந்த கெடிவ் இஸ்மாயில் (Khedive Ismail), தம் நாட்டின் 96,000 பங்குகளையும் பிரிட்டிஷ் அரசாங்கத்திடம் விற்றுவிட்டார். அப்பொழுது பிரிட்டிஷ் அரசாங்கத்தின் முதலமைச்சராக இருந்த பென்ஜமின் டிஸ்ரலி (Benjamin Disrali) மிகத் துணிவோடு மொத்தம் 1,76,752 பங்குகளை வாங்குவதற்காக 2,00,00,000 டாலர்கள் கடன் வாங்கினர். சூயஸ் கால்வாய் கம்பெனியின் இலாபத்தில் 40 சதவிகிதம் பிரிட்டனுக்குச் சேரும்படியான நிலைமை ஏற்பட்டது. பிரெஞ்சு நாட்டுக்குப் பங்குகள் அதிகமாக இருந்ததால், அதுவே கம்பெனியின் ஆட்சி நிருவாகத்தில் தொடர்ந்து ஆதிக்கம் செலுத்துவதாக இருந்துவந்தது. 1955 இல் அமைந்திருந்த நிருவாகக் குழுவில் பிரெஞ்சுக்காரர்கள் பதினாறு பேரும், பிரிட்டிஷ்காரர்கள் ஒன்பது பேரும், எகிப்தியர்கள் ஐந்துபேரும், அமெரிக்கர் ஒருவரும், நெதர்லாந்துக்காரர் ஒருவரும் ஆக முப்பத்திரண்டுபேர்கள் இருந்தனர். பிரெஞ்சு அரசுக்கு ஒரு பங்குகூட அந்தக் கம்பெனியில் இல்லை என்றாலும், பங்குதாரர்களுக்கு விதிக்கப்படும் வரிகள் மூலம் அதற்கு ஏராளமான தொகை கிடைத்துவந்தது.

### கால்வாயின் முக்கியத்துவம்

உலகிலுள்ள மற்ற கால்வாய்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, சூயஸ் கால்வாய் கப்பல் போக்குவரத்திலும்சரி, சாமான்கள்



போக்குவரத்திலும் சரி ஆண்டுதோறும் அதிகத் தொகையுள்ள கப்பல்களையும், அதிக எடையுள்ள சாமான்களையும் அப்புறப்படுத்துவதாகவே அமைந்திருக்கிறது. சூயஸ் கால்வாய்க்கு அடுத்தபடி, பனமாகால்வாயைப் பெரிய கால்வாய் என்று சொல்லலாம். அது 50 மைல் நீளத்தையும், 40 அடி ஆழத்தையும் கொண்டது. ஆண்டு ஒன்றுக்குப் பனமா கால்வாயின் மூலமாக அப்புறப்படுத்தப்படும் சாமான்களின் எடை அளவு, சூயஸ் கால்வாயின் மூலமாக அப்புறப்படுத்தப்படும் எடை அளவில் பாதிக்கும் குறைவாகத்தானிருக்கும். வெல்லண்டுகால்வாய் (Welland Canal) சூயஸ் அளவில் ஐந்தில் ஒரு பகுதி எடை அளவையும், மான்செஸ்டர்கால்வாய் (Manchester Canal) பத்தில் ஒரு பகுதி எடை அளவையுந்தான் ஆண்டு ஒன்றுக்கு அப்புறப்படுத்துகின்றன.

1955 ஆம் ஆண்டில் சூயஸ் கால்வாய் வழியாக 11,85,00,000 டன் எடையுள்ள பொருள்களும், பனமா கால்வாய் வழியாக 4,92,00,000 டன் எடையுள்ள பொருள்களும் அப்புறப்படுத்தப்பட்டிருக்கின்றன.

### அப்புறப்படுத்தப்படும் முக்கிய பொருள்கள்

சூயஸ் கால்வாய் வழியாக அப்புறப்படுத்தப்படும் பொருள்களில் மிக முக்கியமானவை மண்ணெண்ணெய்யும், பிற எண்ணெய்ப் பொருள்களும் ஆகும். 1955 ஆம் ஆண்டில் அப்புறப்படுத்தப்பட்ட பொருள்களில் 65 சதவிகிதம் எண்ணெய்ப் பொருள்களேயாகும். மற்றப் பொருள்களில் பெரும்பாலானவை ஐரோப்பிய நாடுகளை நோக்கிச்செல்லும் வெறும் மூலப்பொருள்களேயாகும். பொதுவாக நோக்குமிடத்து, மேற்கு நோக்கிச் செல்லும் கப்பல்கள் வெறும் மூலப்பொருள்களை மிகவாக ஏற்றிச்செல்வனவாகவும், கிழக்குநோக்கிச் செல்லும் கப்பல்கள் பெரும்பாலும் உற்பத்திப்பொருள்களை ஏற்றிச் செல்வனவாகவும் இருக்கக்காணலாம்.

### சூயஸ் கால்வாயினல் கிடைக்கும் லாபம்

1954-ஆம் ஆண்டை மட்டும் எடுத்துக் கொண்டால், சூயஸ் கால்வாய் கம்பெனிக்கு ஏற்பட்ட மொத்த வரவு 9,27,30,574 டாலர்கள்; மொத்த செலவு 4,81,76,827 டாலர்கள்; ஆக மொத்தம் ஏற்பட்ட இலாபம் 4,45,53,747 டாலர்கள் ஆகும். ஒவ்வொரு பங்குக்கும் 30 51 டாலர் இலாபம் கிடைத்திருக்கிறது. கப்பல்களின் போக்குவரத்து மிகவாக இருப்பதைக் கணக்கிட்டு அந்த ஆண்டு கம்பெனியார் வரியின் விகிதத்தைச் சற்று குறைத்தார்கள். இப்படி வரி குறைக்கப்பட்ட இது இருபத்தேழாவது தடவையாகும். பிரிட்டன் இதுவரையில் சூயஸ் கால்வாய் கம்பெனிக்கு எவ்வளவு பங்குகள் செலுத்தியதோ, அவற்றைவிட எட்டுமடங்குக்கும் மிகவான இலாபத்தை அது பெற்றிருக்கிறது.

### கால்வாயும் அகில உலகத்துவமும்

1873-ஆம் ஆண்டில் கான்ஸ்டான்டி நோபிளில் (Constantinople) அகிலஉலக ஆய்வுக்குழு (International Commission) ஒன்றுகூடி, சூயஸ் கால்வாய் வழியாகப் போக்குவரத்து செய்யும் கப்பல்களுக்கு எந்தெந்த முறையில் வரிகள் போடலாம் என்பதைப்பற்றிச் சிந்தித்தது. கப்பல் போக்குவரத்துக்கள் அதிகமாக அதிகமாக வரிவிதிப்பின் அளவும் குறையவேண்டும் என்று அப்பொழுது அந்தக் குழுவால் முடிவு எடுக்கப்பட்டது.

1888-ஆம் ஆண்டில் மீண்டும் கான்ஸ்டாண்டி நோபிளில் கூடிய கூட்டத்தில், எந்த நாட்டுக் கப்பலாக இருந்தாலும், எந்தக் கொடி போட்ட கப்பலாக இருந்தாலும், போர்க்காலமாக இருந்தாலும், அமைதியான காலமாக இருந்தாலும் எல்லாக் கப்பல்களையும் சூயஸ் கால்வாய் வழியாக அனுமதிக்க வேண்டும் என்று முடிவு எடுக்கப்பட்டது. பிரிட்டன், ஜெர்மனி, ஆஸ்திரியா, பிரான்ஸ், ஸ்பெயின், இத்தாலி, நெதர்லாந்து, ரஷ்யா, துருக்கி போன்ற நாடுகள் அம்முடிவை ஒப்புக்கொண்டு கையெழுத்திட்டன. இப்படி அகில உலக முக்கியத்துவத்தோடு எடுக்கப்பட்ட முடிவுதான், கம்பெனியைக் கட்டுப்படுத்துவதாக அமைந்துள்ள உடன்படிக்கையாகும். என்றாலும் போர்க்காலங்களில் இந்த உடன்படிக்கையும் சிற்சிலபொழுது மீறப்பட்டிருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும்.

இரண்டாவது உலகப் பெரும்போரின் போது, பிரிட்டன் சூயஸைத் தன் ஆதிக்கத்தின் கீழ் முழுக்க முழுக்க வளைத்து வைத்துக்கொண்டு ஆட்சி புரியவே செய்தது. 1950ஆம் ஆண்டிலிருந்து எகிப்து இஸ்ரேல் நாட்டுக் கப்பல்களுக்கு வழிவிட மறுத்து, அவற்றைத் தடுத்து நிறுத்தியே வந்தது. எகிப்து—இஸ்ரேல் ஆகிய இருநாடுகளுக்கிடையே போர் மாற்சரியம் நீடித்துவந்ததால் இஸ்ரேல் நாட்டுக்குச் சாமான்கள் ஏற்றிச் செல்லும் கப்பல்களுக்கு வழிவிட எகிப்து மறுத்து வருகிறது.

## நர்சரின் நடவடிக்கை

எகிப்திய நாட்டுத் தலைவர் நாசர் இப்பொழுது சூயஸ் கால்வாயின் முழு ஆதிக்கத்தையும், சூயஸ் கால்வாய் கம்பெனியாரிடமிருந்து பிடுங்கி, அந்தக் கால்வாயைத் தேசியமயமாக்கி, எகிப்து அரசின் கீழ்க்கொண்டு வந்துவிட்டார். சூயஸ்கால்வாய் கம்பெனியார் எகிப்து அரசுடன் துவக்கத்தில் செய்து கொண்டுள்ள உடன்படிக்கைப்படி, இன்னும் பன்னிரண்டுஆண்டுகள் கழித்தபிறகே சூயஸ் கால்வாயின் முழு ஆதிக்கமும், சொத்துரிமையும் எகிப்து அரசின்கீழ் வரவேண்டும்.

நாசர் சூயல் கால்வாயின் மூலம் கிடைக்கும் வருமானம் முழுவதும் முறைப்படி எகிப்து நாட்டைத்தான் சேரவேண்டும் என்று உரிமைப் போராட்டத்தைத் துவக்கியுள்ளார். எகிப்தின் வளத்தையும், வருவாயையும் பெருக்க இதைத் தவிர வேறு வழியில்லை என்று வாதாடுகிருர். சூயஸ் கால்வாய் கம்பெனியார் வேலைக்கு வைத்திருந்த அவ்வளவு பேர்களையும் அப்படியே அதே நிலையில், அதே முறையில் ஏற்றுக்கொள்ள முனைந்திருப்பதோடு, எல்லா நாட்டுக் கப்பல்களும் வழக்கம்போல் சூயஸ் கால்வாயைப் பயன்படுத்திக்கொள்ள உரிமை கொடுக்கவும் நாசர் முனைந்துள்ளார்.

சூயஸ கால்வாயை மிகவாகப் பயன்படுத்திவரும் மேற்கத்திய நாடுகளெல்லாம் சூயஸ் கால்வாயை அகில உலக நாடுகள் அனைத்திற்கும் உரிமை வாய்ந்த பொதுவான கால்வாயாக அமைக்க வேண்டும் என்று விரும்புகின்றன. எகிப்திய தலைவர் நாசர், அகில உலக நாடுகளோடு நல்லுறவு கொள்ளவும், உடன்படிக்கை செய்துகொள்ளவும் தாம் எப்பொழுதும் தயாராக இருப்பதாகவும், ஆனல் எகிப்தின் கருத்துக்கும் நலத்திற்கும் மாருக மேற்கத்திய நாடுகள் எந்த ஒரு திட்டத்தை வற்புறுத்தினலும், சூயஸ் கால்வாய் மூடப்பட்டாலும் மூடப்படுமே யொழிய, வற்புறுத்தலுக்கு ஒருகாலும் இணங்கப் போவதில்லை என்றும் முழக்கமிட்டு வருகிருர்.

எகிப்து, ரஷ்யாவின் உதவியோடு போர்க் கப்பல்கள் பலவற்றையும் சூயஸில் நிறுத்தி வைத்திருக்கிறது. மேற்கத்திய நாடுகளும சூயஸ் அருகில் போர்க் கப்பல்களைக் கொண்டு போய் நிறுத்தி வைத்திருக்கின்றன.

சூயஸ் பிரச்சினைபற்றி நல்லதொரு முடிவு காண பல நாடுகள் கொண்ட மாநாடு ஒன்று இலண்டனில் நடைபெற்றது. ஐந்து முக்கிய நாடுகள் அடங்கிய குழு ஒன்று நியமிக்கப்பட்டு, அந்தக் குழு நாசரைக் கண்டு பேசி நல்ல முடிவு காணவேண்டும் என்று மாநாட்டில் தீர்மானிக்கப்பட்டது. அந்தக் குழுவும் நாசரைக் கண்டு பேசிற்று. உலகம் நல்லதொரு சூழ்நிலையை இன்னமும் எதிர்பார்த்துக்கொண்டே இருக்கிறது.

சூயஸ் கால்வாயின் மூலம் கிடைக்கும் வருமானம் முழுவதையும் எகிப்திய நாட்டுக்குப் பயன்படுத்திக்கொள்ள நாசர் திட்டமிட்டிருக்கிருர். அதன் மூலம் கிடைக்கும் வருமானத்தைக்கொண்டு அசுவான்அணை என்னும் பெரியதொரு அணைக்கட்டை நிறுவ அவர் எண்ணியுள்ளார். அசுவான் அணையைக் கட்டுவதற்கு உதவிபுரியும்படி நாசர் சூயஸ் கால்வாய் கம்பெனியைக் கேட்டுக்கொண்டார். அந்த வேண்டுகோளை நிறைவேற்றி வைக்க சூயஸ் கால்வாய் கம்பெனி முன்வராததால், நாசர் சூயஸ் கால்வாய் கம்பெனிமீது சினங்கொண்டு, அந்தக் கம்பெனியைத் தேசியமயமாக்கத் திட்டம் போட்டார்.

## கால்வாயின் ஆட்சி ஆதிக்கம்

கால்வாயின் ஆட்சி ஆதிக்கம் எப்படி அமைந்திருக்கவேண்டும் என்பதை உலகிலுள்ள நாடுகள் பலவும் சிந்தித்து வருகின்றன. சூயஸ் கால்வாய் அகில உலக அமைப்பு ஒன்றினல் கண்காணிக்கப்பட வேண்டும் என்று மேற்கத்திய நாடுகள் பலவும் கருதுகின்றன. சூயஸ் கால்வாயை இலாபநோக்கமில்லாத அகில உலக அமைப்பு ஒன்றின் ஆளுகைக்கிழ் கொண்டுவந்து, எகிப்துக்குப் போதுமான அளவு கட்டணங்கள் செலுத்தும்படி செய்யலாம் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் கூறுகிறது. சூயஸ் கால்வாயை "ஐக்கியநாடுகள்" அவையின் ஆட்சியில் கொண்டுவந்து அதனை உலக நாடுகளுக்கெல்லாம் பொதுவாக வைத்துக் கண்காணித்து வரலாம் என்று 'ஐக்கியநாடுகள்' பொதுச் செயலாளர் ஹாமர்ஸ்க்ஜோல்டு கூறியுள்ளார். சூயஸ் கால்வாய் எகிப்தின் ஆட்சியின்கீழ் தான் இருக்கவேண்டும், வேண்டுமானல் அகில உலக ஆலோசனைக்குழு ஒன்று அதற்காக நியமிக்கப்படலாம் என்று கிழக்கத்திய நாடுகள் கருதுகின்றன.

சூயஸ் கால்வாயைத் தேசிய மயமாக்கியிருக்கும் நாசர் மிக்க மனவுறுதியோடும், ஊக்கத்தோடும், உணர்ச்சியோடும் எழுச்சியோடுந்தான் இருந்துவருகிருர். எகிப்தின் நலனைப் பாதிக்கக்கூடிய மேற்கத்திய நாடுகளின் எந்த ஒரு உருட்டல் மிரட்டலுக்கும், வற்புறுத்தலுக்கும் அவர் கீழ்ப்படியமாட்டார் என்றே தெரியவருகிறது. நாசரின் நடவடிக்கை கிழக்கத்திய நாடுகள் அனைத்திற்கும் புதியதொரு வலிவையும், பொலிவையும் தந்திருக்கின்றது.



One side of the page is dark



# அண்டசராசரம்

(51)

தத்தாத்திரேயர் யோகஞ் செய்துகொண்டிருக்கும்பொழுது மற்ற முனிபுத்திரர்கள் அவரைச் சூழ்ந்து, தொந்தரவு கொடுத்தபடி இருந்தார்களாம். மற்றவர்களுடன் இருக்க மனமில்லாமல், தத்தாத்திரேயர் ஒரு மடுவின் மத்தியிலுள்ள சிறுதிட்டில் தனியாக இருந்து தவஞ்செய்து கொண்டிருந்தாராம். திட்டிலிருந்த பாணசாலைக்குள் நுழைந்தவர் நூறு வருடங்களாக வெளியில் வரவேயில்லையாம். அவர் செய்யும் தவங்கண்டு, மடுவின் கரையிலிருந்த முனிபுத்திரர்கள் ஆச்சரியப்பட்டார்களாம். நூறுவருடங்கள் கழித்து, தத்தாத்திரேயர் பர்ணசாலையைவிட்டு, வெளிவந்தார். அவர் மட்டும் வரவில்லை, அவருடன்கூட யௌவனமும் சௌந்தர்யமும் உள்ள இள மங்கையும் இருந்தாளாம்! முனிபுத்திரர்களுடைய ஆச்சரியம் மாறியது. இத்தகைய பெண்ணைத் தனிமையில் வைத்துக்கொண்டு, நூறு வருடங்கள் என்ன ஆயிரம் வருடங்கள்கூட "தவம்" செய்யலாமே! தத்தாத்திரேயரைப் பார்த்ததும், சிலர் விலகிச்சென்றுவிட்டனர். மற்றவர்கள் அவருடன்கூடச் சென்ருர்கள்.

தத்தாத்திரேயர் காமத்துக்குமட்டும் பலியாகவில்லை! அவருடன்கூடச்சென்ற முனிவர்கள் பஞ்சமாபாதகங்கள் எவையெவை என்பதைத் தத்தாத்திரேயரைப் பார்க்கும் பொழுது தெரிந்தனர். அவரருகில் சென்ருல் கள்வாடை அடித்தது. கமண்டலத்தைப் பார்த்தால், மதுரமான மதுமணம் வீசியது! முனிவரும் அழகியும் மதுவருந்தி, மனம்விட்டுப் பேசினர். வேதமொழி சொல்லிக்கொண்டிருக்க வேண்டியவர் போதை மொழிகளைப் பிதற்றிக்கொண்டிருந்தார். அருந்துவது மது மட்டுமல்ல, உண்பது மாட்டிறைச்சிகூட. வேதோத்தமமா யிருக்கவேண்டிய தத்தாத்திரேயர் சொல்லாத பொய்யில்லை, செய்யாத திருட்டு இல்லை. அத்துடன் கொலைசெய்வதற்கும அவர் துணிந்துவிட்டார். பஞ்சமா பாதகங்களையும் ஒன்றுவிடாமல் தத்தாத்திரேயர் செய்தார். கூட இருந்த முனிபுத்திரர்களுக்கு அவர் போக்குப் புரியவில்லை. காட்டில் தவஞ் செய்பவர்கள், சில சமயங்களில் காமத்துக்கு ஆளாவார்கள், கள்ளருந்துவார்கள், கண்சுழலப் பார்ப்பார்கள். ஆனல் அத்திரியின் மகன், தவத்தை மறந்து மற்றவற்றை முழுநேரவேலையாகக் கொண்டுவிட்டான. அவன பர்ணசாலையில், எப்பொழுதும் பெண்கள், காமம், மது, மாமிசம, பொய, கொலை, களவு, நிறைந்திருந்தன. அவனது மோச நிலையைக் கண்டு மனமபுழுங்கிய முனிபுத்திரர்கள அவனைவிட்டு நீங்கி, அத்திரிமுனிவரிடம்போய், அவருடைய மகனைப்பற்றிச் சொன்னர்கள்.

தம் அருந்தவப் புதல்வன் இப்படி ஆகிவிட்டானேயென்று அத்திரி மனம் நொந்தார். அநசூயை கண்ணீர்விட்டு அழுதாள். மும்மூர்த்தி அருளால் பிறந்த குழந்தை இப்படியிருக்கிறது என்ருல் யார் நம்புவார்கள்? யார்தான் வருத்தப்படமாட்டார்கள். அத்திரிமுனிவர், தமது குருபத்தினியை வருத்தப்படாமல் இருக்கச் சொல்லி, நேரில்கண்டு வருவதற்காகத் தத்தாத்திரேயனின் பர்ணசாலைக்கு வந்தார். முனிபுத்திரர்கள் சொல்லியபடி, அந்தப் பர்ணசாலையில், மதுவோ, மாதர் கூட்டமோ,

கொலையோ களவோ காணப்படவில்லை. தத்தாத்திரேயன் மட்டும் மான் தோல்மீது அமர்ந்து யோகத்தில் ஈடுபட்டிருந்தான். சிறந்த தவசிகளின் பர்ணசாலையைப் போன்று, குற்றமெதுவும் காணப்படாமல் அந்தப் பர்ணசாலை இருந்தது. அத்திரி முனிவர் ஆச்சரியப்பட்டார். "பர்ணசாலையா அது? இல்லை, பஞ்சபாணனின் சோலை!" என்று முனிபுத்திரர்கள் சொல்லிக் கேலி செய்தார்கள். இங்கு பர்ணசாலை மிக நிம்மதியாக இருந்தது. யோகத்திலிருந்து விழித்த தத்தாத்திரேயர் தந்தையைப் பார்த்து வணங்கி, உபசாரங்கள் செய்தார்.

அத்திரி முனிவர் சொன்னார் "ஏ! தத்தாத்திரேயா! இருடிபுத்திரர்கள் உன்னைப்பற்றி இழிவாகச் சொன்னார்கள். காமுகன் என்றும் களவு கொலைகளில் வல்லவனென்றும், பஞ்சமாபாதகங்களுக்கு அஞ்சாதவனென்றும் அவர்கள் சொன்னார்கள். இந்தப் பர்ணசாலையில் எப்பொழுதும் மதுவும் மாதரும் நிறைந்திருந்ததாகச் சொன்னார்கள். இங்குவந்து பார்த்தால், அவ்வாறு எதையுங் காணோம்! அவர்கள் சொல்லியது பொய்யா?

தத்தாத்திரேயன் இடைமறுத்து, "முனிபுத்திரர்கள் பார்த்தது உண்மைதான்!" என்று பதிலளித்தான்.

முனிவரின் மகிழ்ச்சி மறைந்தது. "இந்தப் பர்ணசாலையில் பஞ்சமாபாதகங்கள் நிகழ்ந்தனவா? மறைக்காமல் சொல்! தந்தையிடத்தும் ஆசானிடத்தும் பொய் சொன்னால் படு நரகம் சம்பவிக்கும்! என்று அத்திரி கோபத்துடன் கேட்டார்.

"நான் மறுக்கவில்லை." என்று தத்தாத்திரேயன் பதிலளித்தான்.

அத்திரிக்குப் புரியவில்லை. "ஏன் அவ்வாறு இருந்தாய்?"

விட்டுணுவின் அவதாரமாக இருந்த தத்தாத்திரேயர் ஏன் அப்படிச் செய்தார் என்பது அத்திரிக்குமட்டுமல்ல, புராணத்தைப் படிக்கும் பக்தர்களுக்கும் உண்டாகக் கூடிய சந்தேகம். தான் பஞ்மாபாதகங்களில் ஈடுபட்டதற்குத் தத்தாத்திரேயன் சொன்ன சமாதானம் வேடிக்கையானது.

"நான் தவஞ்செய்யுமிடத்தில், எனக்குப் பக்கத்தில் நின்று, மற்ற இருடிபுத்திரர்கள் தொந்தரவு கொடுத்தபடி இருந்தார்கள். அந்த இருடிபுத்திரர்களை விரட்டியடிப்பதற்காக கெட்டவன் போல இருந்தேன். என்னைப் பார்த்து, வெறுப்படைந்து, அவர்கள் போய்விட்டார்கள். இப்பொழுது நான் தனிமையில் தவஞ் செய்யமுடிகிறது." தத்தாத்திரேயரிடம் சமாதானம் கேட்டு, அத்திரி முனிவர் எவ்வளவு தூரம் திருப்தி அடைந்தார் என்று சொல்லமுடியாது. இருந்தாலும், தத்தாத்திரேயர் தனிமையில் தவஞ்செய்வது நல்லதல்ல என்று நினைத்தார். அவருக்கு ஒரு பெண்ணைத் தேடி, கன்னிகாதானம் வாங்கித் தந்தார். தத்தாத்திரேயர் விட்டுணு அவதாரமானதால், அவருடைய பத்தினி இலட்சுமியின் அவதாரமாக இருந்தாள்.

தத்தாத்திரேயரும், அவருடைய மனைவியும் பர்ணசாலையில் தங்கினார்கள். தத்தாத்திரேயர் தவத்திலீடுபட்டார். இலக்குமியின் அவதாரமான முனிபத்தினி அவருக்குப் பணிவிடைகள் செய்தபடி இருந்தாள்.

அந்தச் சமயத்தில் சம்பராசுரன் என்பவன் தேவர்களுடன் சண்டையிட்டு, பல துன்பங்களை இழைந்தான். சம்பராசுரனுக்கு ஆற்றமாட்டாத தேவர்கள், விட்டுணுவின் அவதாரமான தத்தாத்திரேயரிடம் வந்து முறையிட்டார்கள். "என் கண்ணெதிரில் சம்பாசுரன் என்றைக்கு உங்களுக்குத் துன்பஞ் செய்கிறானோ, அன்று அவன் அழிந்துவிடுவான்" என்று சொன்னார். தேவர்கள் மீண்டும சம்பராசுரனிடம் போய்ச் சண்டையிட, பலமான தோல்வி கண்டு, சம்பராசுரன துரத்த தத்தாத்திரேயர் பர்ணசாலைக்குள் வந்து ஒளிந்துகொண்டார்கள். துரத்திக்கொண்டு வந்த சம்பராசுரன், பர்ணசாலைக்குப் பக்கத்தில் தத்தாத்திரேயரின் பத்தினி-இலட்சுமியின் அவதாரமான பெண் நிற்பதைக்கண்டான். முனிபத்தினி தனியாக இருப்பதைப் பார்த்த அசுரன், அவளைத் தூக்கிக்கொண்டு போனான். ஆனால் ஆசிரமத்தைவிட்டு எட்டு அடிகள் வைப்பதற்குள், இலட்சுமி மறைந்துவிட்டாள்.

பர்ணசாலையிலிருந்தபடி தத்தாத்திரேயர் இவ்வளவையும் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறார்; தேவர் ஓடிவருவது, சம்பராசுரன் துரத்தி வருவது, இலட்சுமியைக் கண்டதும் கையை வீசி அவளைத் தூக்கிச்செல்வது, பிடிபட்டமான்போல அவள் அடங்கிக்கிடந்தது, பின் மாயமாய் மறைந்துவிட்டது எல்லாவற்றையும் அவர் பார்த்தபடிதான் இருந்தாராம். "கண்ணெதிரே அவன் துன்பங்கள் செய்தால், அவன் அழிந்துவிடுவான்" என்றல்லவா தத்தாத்திரேயர் சொல்லி இருந்தார். அது இப்பொழுது நிகழ்ந்துவிட்டது.



இப்பொழுது "நீங்கள்போய், சம்பராசுரனுடன் சண்டையிடுங்கள். வெற்றி நிச்சயம்!" என்று தேவர்களை அனுப்பினர். தேவர்களும் சண்டையிட்டனர். தத்தாத்திரேயரின் உதவியால் சம்பராசுரன் அழிக்கப்பட்டான்.

இந்தக்கதையில் வரும் சம்பவமும், மற்றொரு அவதாரத்தில்—இராமாவதாரத்தில் வரும் சம்பவமும் ஓரளவு ஒத்திருப்பதைக் காணலாம். தத்தாத்திரேயரின் மனைவியைச் சம்பராசுரன் தூக்கிச் சென்றான், அதனால் அழிக்கப்பட்டான். இராமபிரானின் மனைவியை இராவணன் என்ற அரசன் தூக்கிச்சென்றான், அதனலழிக்கப்பட்டான். தத்தாத்திரேயரும் இராமரும் விட்டுணுவின் அவதாரங்களாகச் சொல்லப்படுகின்றனர். அவர்களுடைய மனைவியாகச் சீதை அவதாரமெடுத்தாளென இரண்டு கதைகளும் கூறுகின்றன.

## யஞ்ஞமூர்த்தி அவதாரம்

ஏழாவது அவதாரத்தில் விட்டுணு யஞ்ஞமூர்த்தியாகப் பிறந்தாராம்.

உருசிபிரசாபதி என்பவர் முனிவர்களில் ஒருவர். இளமையில் உலகைத் துறந்து, தவஞ் செய்துகொண்டிருந்தாராம். பிரமசாரியாக நெடுங்காலம் இருந்தமையால் பிதுர் லோகத்திலிருந்த அவருடைய பிதுர்க்கள் கீழ் இறங்கிவந்து, "நீ ஏன் கல்யாணஞ் செய்து கொள்ளாமலிருக்கிறாய்" என்று கேட்டார்களாம். உருசிப் பிரசாபதி, இல்லறத்தில் தனக்குள்ள வெறுப்பைச் சொன்னார். "நீ கல்யாணஞ் செய்துகொண்டு இல்லறம் நடத்தாவிட்டால், நாங்கள் நரகவாதனைகள் அனுபவிக்க வேண்டியிருக்கும். உனக்குப் பிடிக்காவிட்டாலும், உன்பிதுர்க்களாகிய எங்களை நரகத்திலிருந்து தப்புவிக்க நீ இல்லறம் ஏற்றுத்தான் ஆகவேண்டும்!" என்று சொன்னார்கள். இல்லறம் நடத்த உருசிப்பிரசாபதி ஒப்புக்கொண்டார். ஆனால் திருமணவயதைக் கடந்து, நரையுந்திரையுங்கொண்ட முதியோனான நிலையில் எப்படிப் பெண் கிடைக்கும் என்ற கவலை உருசிக்கு உண்டானது. பின் பிரமனை நோக்கித் தவமியற்ற ஆரம்பித்தார். தனக்கு ஒரு கல்யாணப்பெண்ணை உண்டாக்கித் தருமாறு. தவத்தின் முடிவில் பிரமன் தோன்றி என்ன வரம் வேண்டுமென்று கேட்க, "எனக்குப் பத்தினியாக ஒரு பெண் வேண்டும்" என்று உருசிமுனிவர் வேண்டிக்கொண்டார். "அவ்வாறு உனக்குக் கிடைக்கும்!" என்று பிரமன் வரந்தந்து மறைந்தார். வரங் கிடைத்ததே யன்றிப்பெண்கிடைக்காததுகண்ட உருசிமுனிவர் தவக்கோலத்தைக் கைவிடாது இருந்தார்.

கடைசியாக, உருசிமுனிவருக்கு எதிரில் பிரமலோசையென்ற அப்சரசுப்பெண் வந்தாள். அவளைப்பார்த்ததும், தனது தவத்தின் பலன் கிடைத்துவிட்டதென்று, உருசி முனிவர் மிக மனமகிழ்ந்தார். பிரமலோசை இந்திரலோகத்து நடனமாதர்களில் ஒருத்தி. தவஞ்செய்யும் முனிவர்களைமயக்க, இந்திரனால் அடிக்கடி அனுப்பப்படுபவள். அந்த தேவமாதைக் கண்டதும் உருசிமுனி குதுகலித்தார். ஆனல் அவள், அருகே வந்த உரிசி முனிவரைத் தொடாமல் எட்டிநின்றாள். நரைதிரைமூடி, வயதான தன்னை அவள் ஒதுக்கிவிட்டாள் என்று உருசிமுனிவர் மனமுடைந்து நின்றார். பிரமலோசை, அவரை வணங்கி "தங்களுக்குப் பத்தினியாகும் பாக்கியத்தைப் பெற்றவள், என்மகள் மாலினி. அவளையடைந்து, பிதுர்க்களைச் சாந்தப்படுத்துங்கள்." என்று சொன்னாள். இந்தவயதில்பிரமலோசைகிடைப்பாளோ என அவர் மயங்கியதுபோய், அவளுடைய மகள் தனக்குப் பத்தினியாவாள் என்று கேட்டதும் உருசி மகிழ்ச்சியில் கூத்தாடினார். ஒருசமயம், கண்டு என்ற முனிவர் மகத்தான தவம் செய்ய, இந்திரன் பிரமலோசையை அனுப்பினான். பிரமலோசையைப் பார்த்து கண்டுமுனிவர் தவங் கலைந்து, அவள்பால் மயங்கிகிடந்தார். குழந்தை பிறந்தது. கண்டு முனிவர், விசுவாமித்திரரைப்போல பிரமலோசையையும் குழந்தையையும்விட்டுத்தவஞ் செய்யப் போனார். அந்தப் பெண் குழந்தை மாலினி என்ற பெயரில் வளர்ந்தது. அந்தப் பெண்ணைத்தேடி உருசி முனிவர் சென்றார். தாயின் கட்டளைப்படி மாலினியும் உருசிமுனிவரை மணந்தாள்.

உருசி முனிவருக்கு மற்றொரு மனைவியும் கிடைக்கிறாள். சுவாம்புமனு என்ற முதல் மனுவின் மகளான ஆகுதி என்பவள் உருசி முனிவரின் பத்தினியாகிறாள். அவளிடத்தில் விட்டுணு யஞ்ஞமூர்த்தி என்ற மகனைப் பிறக்கிறார். அதாவது அவதாரமெடுக்கிறார். உருசி முனிவருக்கும் ஆகுதிக்கும் தட்சணை என்ற பெண் பிறக்கிறாள்.

யஞ்ஞமூர்த்தி பிரமசாரியப் பருவம் முடிந்ததும், மணம் புரிந்து கொள்ளுகிறார். தந்தை உருசி முனிவரைப்போல, பெண்வேண்டித் தவஞ் செய்தோ, வரம் பெற்றோ அலையவில்லை. வீட்டிலே இருந்த பெண்ணை-தங்கை தட்சணையை மனைவியாக ஆக்கிக்கொண்டார். யஞ்ஞமூர்த்தி விட்டுணுவின் அவதாரம்.

அவருடைய அவதாரத்தில் நடைபெற்ற முக்கியமான சம்பவம் தங்கையைத் தாரமாகக் கொண்டதுதான். தட்சணை இலட்சுமியின் அவதாரம், ஆதலால் யஞ்ஞமூர்த்தி தங்கையான தட்சணையை மணஞ்செய்து கொள்ள வேண்டியிருந்தது என்று புராணகாரர்கள் சமாதானங் கூறுவார்கள். இலட்சுமி தங்கையாகத்தான் அவதார மெடுக்கவேண்டும் மென்று என்ன கட்டாயம் வந்தது? மனைவியாகத் தக்கமுறையிலோ, அல்லது முன்பின் தெரியாத தூரத்திலோ பிறந்திருக்கலாம். புராணகாலத்தில் மகளோ, தங்கையோ மனைவியாகும் முறை, ஒழுக்கக்கேடாகக் கருதப்படவில்லை. அல்லது ஒழுக்கக் கேடாக இருந்தும் புராணகாரர்கள் அவற்றை இழிவென்று கருதாமல் கடவுட் கதைகளில் புகுத்தியுள்ளனர்.

யஞ்ஞமூர்த்தி இந்திர பதவியடைந்து, தேவர்களைக் காப்பாற்றினராம். யமன் முதலிய கடவுளர்கள் யஞ்ஞமூர்த்திக்கு ஏவல் புரிந்தார்களாம். சுவாம்பு மனுகாலம்முழுவதும் உலகங்களைப் பாதுகாப்பதில் யஞ்ஞமூர்த்தி செலவிட்டாராம்.

## ரிஷபர் அவதாரம்

சைநமதத்தில் தீர்த்தங்கரர்கள் சமய ஆசிரியர்களாக இருந்தவர்கள். அவர்களில் ரிஷப தீர்த்தங்கரர் என்பவர் முக்கியமானவர். மத்திய காலத் தீர்த்தங்கரர்களில் வர்த்தமானருக்கு அடுத்தபடியாக ரிஷப முனிவர் கூறப்படுகிறார். சைநமதத்தில் ரிஷப முனிவர் சிறந்த கவர்ச்சி பெற்றவராக இருந்திருக்க வேண்டும். அன்பு நெறியைச்சேர்ந்த புத்தர், மக்களிடைப் புகழ் பெற்றுள்ளார் என்றதும் எவ்வாறு விட்டுணு அவதாரங்களில் ஒன்றாகப் புத்தாவதாரம் சேர்க்கப்பட்டதோ, அவ்வாறே சைந சமயத்தைச் சார்ந்த ரிஷபமுனி வரும் விட்டுணு அவதாரங்களில் ஒன்றாகச் சேர்க்கப்பட்டுவிட்டார்.

பாகவத புராணக்கதைப்படி, அக்னி துருவன் என்ற மன்னன் நவகண்டங்களையும் ஆண்டு வந்தானும். அவன் அரசகோலத்தை விட்டு, தவக்கோலம் பூண்டு, காட்டுக்குச் சென்று கடுந்தவம்புரிய, அவன் தவத்தைக் கலைக்கப் பிரமதேவன் தன் சபையில் நடனமாடும் பூர்வசித்தி என்பவளை அனுப்பினராம். பூர்வசித்தி வந்து அக்னிதுருவனை மயக்கி, அவனுடன்கூட ஒன்பதுகோடி வருடங்கள் இன்பந்துய்த்தாளாம். அவர்களுக்கு ஒன்பது பிள்ளைகள்—நாபி, இர்புருசன், அரி, இளவிருதன், ரம்யன், இரண்மயன், குரு, பத்ராச்சுவன், கேதுமாலி என்ற ஒன்பது பிள்ளைகள் பிறந்தனர். அக்னி துருவன் தான் ஆண்ட சம்புத்தீவை ஒன்பது கண்டங்களாகப்பிரித்து, ஒன்பது பிள்ளைகளுக்கும் கொடுத்தான். முதலில் சொன்ன நாபி அரசனுக்கு, மேருவுக்குத் தெற்கேயுள்ள பூமி கிடைத்தது.

மேருவிற்கு ஒன்பது பெண்கள் இருந்தார்களாம். அவர்களை அக்னிதுருவனின் ஒன்பது பிள்ளைகளும் மணந்துகொண்டனர். மூத்த பெண்ணான மேருதேவி நாபிமகராசனுக்கு மனைவியானாள்.

நாபிமகராசனுக்குப்பிள்ளை இல்லை. அதனால், பிராமணர்களை அழைத்து, அவர்கள் யோசனைப்படி பெரியயாகம் செய்தான். வேதவிதிப்படி தட்சிணைகள் தந்தான். யாகமுடிவில் விட்டுணுமூர்த்தி காட்சியளித்தாராம். யாகப் புரோகிதர்கள் "நமோ நம" என்று வணங்கி, "ஓ! பிரபுவே! நாபி மகராசனுக்குப் பிள்ளையில்லாக்குறை இருக்கிறது, அதை நீக்க ஒரு மகனை-உம்மைப்போன்ற மகனை அருளவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்கள்.

அதற்குப் பகவான் சிரித்து, "ஓ! பிராமணோத்தமர்களே! எவராலும் பெறமுடியாத வரத்தைக் கேட்டுவிட்டீர்கள். என்போல ஒரு மகன் நாபி மகராசனுக்கு வேண்டும் என்று சொல்லுகிறீர்கள். பிரபஞ்சத்தில் நான் ஒருவன்தான் என்பதை மறந்துவிட்டீர்கள். நான் நானேதான். என்னைப்போல வேறொன்று இருக்க முடியாதே!" என்று சொன்னர்.

யாகஞ் செய்த அரசனும், யாகம் நடத்திய பிராமணரித்விக்குகளும மனம் வருந்தினர்கள்.

விட்டுணுமூர்த்தி அவர்களைத் தேற்றி "இருந்தாலும், பிராமணர்களாகிய நீங்கள் சொன்ன வாக்குப் பலிக்காமற் போகக்கூடாது: பிராமணர்கள் கடவுள்களை ஒத்தவர்கள்; அவர்கள் சொன்னது நான் சொன்னதாகும். ஆதலால் அவர்கள் கேட்டுக்கொண்டது வீண்போகாதபடி, நாமே நம் அம்சத்தில் ஒரு பகுதியாக நாபிராசனுக்கு மகனாக அவதரிப்போம்" என்று கூறினர். இது பாகவதபுராணம்-5வது காண்டம், 3வது அத்தியாயம் 17 வது சுலோகத்தில் சொல்லப்பட்டிருப்பதை அப்படியே மொழிபெயர்த்து எழுதப்பட்டதாகும். புரோகிதர்களாக விளங்கியவர்கள் தங்கள் குலத்துக்குப் பெருமை தேடிக்கொள்ள, புராணங்களிலும் வேதங்களிலும் வேண்டிய இடங்களிலும் புனைந்தும் புகழ்ந்தும் எழுதிக்கொண்டனர். அவற்றில் ஒன்றே இதுவாகும்.

விட்டுணு தாம் பிராமண ரித்விக்களுக்கு வாக்களித்தபடி நாபிமகாராசனின் மனைவியான மேருதேவிக்கு மகனாகப்பிறந்தார்.



# ★ மருத்துவ மயக்க மருந்து ★

6

உடல் நலங்குன்றி வறுமையில் வாடிக்கொண்டிருந்த வெல்சிற்கு, பிரான்சுநாட்டுப் பயணம் நல்ல பயனை யளித்தது. மயக்க மருந்தை ஆராய்ச்சியின் நோக்கத்தோடு அடிக்கடி உட்கொள்வது, பயணத்தின் காரணமாகத் தடைப்பட்டு நின்றிருந்தால் வெல்சின் உடல் நிலை சற்று நலம் பெற்றது. சில பாரிஸ் ஓவியங்களை வாங்கி அமெரிக்காவிற்கு ஏற்றுமதி செய்ததில் சிறிது பொருளும் ஈட்டினர். இதைத் தவிர்த்து பிரான்சு நாட்டுப் பயணம் வெல்சின் அறிவியற் கண்டுபிடிப்பின் சிறப்பை வெளிப்படுத்தியது.

அமெரிக்கர்களைவிட பிரான்சு நாட்டு மக்கள் ரண மருத்துவ மயக்க மருந்து கண்டுபிடிப்பு பற்றி, அதிகம் தெரிந்துகொண்டிருந்தார்கள். ஜாக்சன் மட்டுமே தனது அறிக்கையை பிரெஞ்சு அறிவியற் கழகத்தின் பார்வைக்கு அனுப்பியிருந்தார் என்றாலும், வெல்சைப் பற்றியும் மார்டனைப்பற்றியும் அவர்கள் கேள்விப்படாமல் இல்லை. செய்தித்தாள்களில் அவர்களுடைய கண்டுபிடிப்புகள்பற்றிய குறிப்புகள் வரக்கண்டிருந்தனர். பாரிஸ்நகரில் வெல்சைக் கண்ட சிலர் அவரது கண்டுபிடிப்புபற்றிய விவரங்களைக் கூறுமாறு கேட்டனர். வெல்ஸ் தனது முயற்சிபற்றியும் அதையடுத்து எழுந்த வளர்ச்சிகள்பற்றியும் விளக்கமாகச் சில சிறப்புச் சொற்பொழிவுகள் மூலம் அவர்களுக்குத் தெரிவித்தார்.

தான் கண்டுபிடித்ததற்குரிய சான்றுக் குறிப்புகளை வெல்ஸ் எடுத்துவாராததால், அவரது கண்டுபிடிப்பை அதிகார பூர்வமாக ஒப்புக்கொள்ள பிரெஞ்சு அறிவியற்கழகத்தினரால் இயலவில்லை. அதனல், அவர்கள் வெல்சை அமெரிக்காவிற்குத்திரும்பித் தனது ஆராய்ச்சிக்குரிய சான்றுக் குறிப்புகளைச் சேகரித்து அனுப்புமாறு கேட்டுக்கொண்டனர்.

அமெரிக்காவிற்குத் திரும்பிய வெல்ஸ், தனது ஆராய்ச்சிக் குறிப்புகளை ஒன்று திரட்டி ஒரு சிறு புத்தக உருவில் வெளியிட்டார். அதில் நைட்ரஸ் ஆக்சைட், ஈதர் முதலிய வாயுக்களைப் பயன்படுத்தி வேதனையற்ற ரண மருத்துவத்தைக் கண்டுபிடித்த வரலாற்றைக் குறிப்பிட்டு, அதில் தனது பங்கையும் விளக்கமாகத் தெரிவித்திருந்தார். பிரெஞ்சு அறிவியற் கழகத்திற்கு ஒரு பிரதியை வெல்ஸ் அனுப்பி வைத்தார். அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் வெல்சின் நூல்கள் வழங்கப்பட்டன.

வெல்சின் புத்தகத்தைக் கண்ட, வெல்சின் கண்டுபிடிப்பை ஒப்புக்கொள்ளாத சிலர், வேறு வழியைக் கையாண்டு வெல்சின் உரிமையை முறியடிக்க முயற்சித்தனர். நைட்ரஸ் ஆக்சைட் வாயுவைப் பயன்படுத்தியபோது வெல்சின் நோயாளி ஒருவர் இறந்துவிட்டதால், வெல்ஸ் மேற்கொண்டு ஆராய்ச்சிகளை நடத்துவதை நிறுத்திவிட்டார் என்ற வதந்தியைப் பரப்பினர். உண்மையில் நோயாளி யாரும் இறக்கவில்லை. வேல்ஸ் தான் இறக்கும் வரையிலும் தனது ஆராய்ச்சியைக் கைவிடவுமில்லை.

நைட்ரஸ் ஆக்சைட் வாயு ஒரு மயக்க மருந்தல்ல என்று ஜாக்சன் ஒரேயடியாகக் கூறி வெல்சின் கண்டுபிடிப்பை மறுத்தார். அப்பொழுது மருத்துவர்கள் ஈதர் வாயுவையே பெரிதும் பயன்படுத்தி வந்ததால், நைட்ரஸ் ஆக்சைடின் தன்மையை யாவருக்கும் விளக்கிக் காட்ட வேண்டிய அவசியத்திற்குள்ளானர் வெல்ஸ். அதன் பொருட்டு வெல்ஸ் நியூயார்க் நகருக்குச் சென்று அங்கே ஒரு அலுவலகத்தை ஏற்படுத்தினர். மயக்க மருந்து ரணமருத்துவத்திற்கான அறிவுரை, எவ்விதச் செலவுமில்லாமல் வழங்கப்படும் என்பதாக வெல்ஸ் 'நியூயார்க் டைம்ஸ்' என்ற நாளிதழ் மூலம் தெரிவித்தார். வெல்ஸ் தனது ஆராய்ச்சிகளில் அப்பொழுது சிரசால் கண்டு பிடிக்கப்பட்ட குளோரபாரம் என்னும் மருந்தையும் சேர்த்துக் கொண்டார்.

நைட்ரஸ் ஆக்சைட் வாயுவின் மூலம் வேதனையற்ற ரண மருத்துவம் எளிதானதொன்றேயாகும் என்பதை நிரூபித்துக் காட்டினர். அவர் இறப்பதற்குச் சில வாரங்களுக்கு

முன் ஹார்போர்டு நகர மருத்துவ விடுதியில் ஒரு நோயாளியின் காலை அறுப்பதற்கு நைட்ரஸ் ஆக்சைட் வாயுவைக் கொடுத்து ரண மருத்துவம் வெற்றியுடன் முடிய டாக்டர் எல்ஸ்வொர்த் என்பவருக்கு உதவிசெய்து விட்டு நியூயார்க்குக்குத் திரும்பினர்.

பிரெஞ்சு அறிவியற் கழகத்தின் ஆய்விற்கு வெல்சின் புத்தகம் கொடுக்கப்பட்டு ஒரு ஆண்டுக்கு மேலாகியது. கடைசியாக 1848-ம் ஆண்டு ஜனவரி மாதம் 12-ம் தேதி புரூய்ஸ்டர் என்பவர் பாரிஸ் நகரிலிருந்து வெல்சிற்கு ஒரு கடிதம் எழுதினர். மார்டன்தான் கண்டுபிடிப்பிற்குரியவர் என்ற வாதம் ஒரு சிலரால் எழுப்பப்பட்டதென்ருலும், ரண மருத்துவ மயக்க மருந்து முறையை முதலில் கண்டு அறிவித்தவர் ஹார்ட்போர்டு நகரைச் சேர்ந்த ஹொரேஸ்வெல்ஸ்தான் என்று பிரெஞ்சு அறிவியற்கழகம் முடிவு கூறிச் சிறப்புப் பட்டம் அளித்துள்ள செய்தியைத் தெரிவித்து, அதிகார பூர்வமான செய்தி வெல்சிற்கு கழகத்தினரால் விரைவில் அனுப்பப்படும் என்பதையும் புரூய்ஸ்டர் தனது கடிதத்தில் தெரிவித்திருந்தார்.

புரூய்ஸ்டர் எழுதிய கடிதம் அஞ்சலில் எடுக்கப்படும்பொழுது வெல்ஸ் உயிரோடு தான் இருந்தார். ஆனல் அதைப் பெறுவதற்கு உயிர் வாழவில்லை. எந்த மயக்க மருந்து மனிதர்களின் வேதனை நீக்கப் பிறந்ததோ அதே மருந்து வெல்சின் உயிரைப் போக்கிற்று. வெல்ஸ் தற்கொலை செய்துகொண்டார்!

ஆராய்ச்சிகளின் வாயிலாகப் பலவித வாயுக்களை உட்கொண்டு உட்கொண்டு பழக்கம் பெற்ற வெல்ஸ் குளோரபாரத்தை அடிக்கடி உட்கொண்டு அதை ஒரு போதைப் பொருளாகப் பயன்படுத்த ஆரம்பித்தார்.

ரணமருத்துவ மயக்க மருந்தைக் கண்டுபிடித்தது யார் என்று திட்டவட்டமாக ஒரு முடிவைக் காணமுடியாத நேரத்தில் ஆலிவர் வெண்டல் ஹோம்ஸ் (Oliver Vendell Holmes) என்பவர் மருத்துவ மயக்கநிலைக்கு அனஸ்தேஷியா (Anesthesia) என்றும், மருந்திற்கு அனஸ்தெட்டிக் (Anesthetic) என்றும் பெயர்கொடுத்து, மருத்துவ மயக்க மருந்தின் பெயர்க் கண்டுபிடிப்பாளன் என்ற பெயர் பெற்றார்.

ஜனவரி மாதம் 21-ம் நாள். வெல்சின் பிறந்த நாள். அன்று மாலையில் கொஞ்சம் அதிகமாகவே குளோரபாரத்தை உட்கொண்டு விட்டார். அவரது மனநிலை மாறியது. அங்கே கிடந்த ஒரு திராவகப் புட்டியைக் கையில் எடுத்துக்கொண்டு வெளியேறினர். தெருவில் இரண்டு பெண்கள் எதிரே வந்துகொண்டிருந்தனர். வெல்ஸ் தன்னுணர்வு இழந்த நிலையில் கையில் வைத்திருந்த திராவகத்தை ஒரு பெண்ணின்மீது ஊற்றிவிட்டார். ஆனல் அந்தப் பெண்ணின் உடை கருகியதோடு நின்றுவிட்டது; உயிருக்கு ஆபத்து ஏற்படவில்லை. உடனே அந்தப் பெண் வெல்ஸைப் பிடித்துக்கொண்டு கூச்சலிட்டாள். சிறிது நேரத்தில் போலீஸ் வந்தது. வெல்ஸ் கைது செய்யப்பட்டு சிறைச்சாலைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அப்பொழுது வெல்ஸ் யாரென்பது அவர்களுக்குத் தெரியாது. தான் யார் என்ற உணர்வும் வெல்சிற்கு இல்லை.

சிறைச்சாலையில் தன்னுணர்வுக்குத் திரும்பியதும் வெல்ஸ் தனது செயல் கேட்டு மனம் உடைந்தார். இந்தச் சம்பவத்தைக் கேள்வியுற்ற நண்பர்களும் மருத்துவர்களும் பெரிதும் வருந்தினர். வெல்சிற்கு சித்தம் கலங்கிவிட்டதென்றே எண்ணினர். வெல்சை விடுவிப்பதற்கான எல்லா முயற்சிகளும் எடுக்கப்பட்டன. ஆனல் வெல்ஸ் தான்மேலும் உயிர் வாழ்வதை விரும்பவில்லை. தன்னுயிரைப் போக்கிக் கொள்வதெனத் தீர்மானித்து விட்டார். சிறைச்சாலையினரின் அனுமதியோடு தனது அலுவலகத்திற்கு வந்து ஒரு பாட்டில் குளோரபாரத்தையும் ஒரு கத்தியையும் எடுத்துக்கொண்டு சிறைச்சாலைக்குத் திரும்பினர்.

ஜனவரி மாதம் 24-ம் நாள். தனது மனைவிக்கு ஒரு கடிதம் எழுதிவிட்டு, நீண்ட பயணத்திற்கான வேலைகளைச் செய்தார். தலையில் ஒரு துணியைச் சுற்றிக்கட்டி;நெற்றியில் கொஞ்சம் தொங்கும் மாதிரி ஒரு துணியைச் சேர்த்தார். கத்தியை ஒரு பிடியில் கம்பிகொண்டு கட்டிக்கொண்டார். ஒரு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு ஒரு காலை நீட்டினர். நெற்றியில் தொங்கும் துணியில் குளோரபாரம் நனைந்த மற்றொரு துணியைச் சேர்த்துக் கட்டினர். கையிலே கத்தியை எடுத்துக்கொண்டார். குளோரபாரம் வேலை செய்ய ஆரம்பித்தது. உணர்வு கொஞ்சங் கொஞ்சமாக மறைந்துகொண்டு வந்தது. ஒரு நிலை ஏற்பட்டபோது கத்தியினல் தொடையை வேகமாக ஒரு வெட்டு வெட்டினர். தொடை நரம்பு துண்டிக்கப்பட்டு இரத்தம் பீறிட்டு வெளியேறியது. குளோரபாரம் நன்ருக வேலை



செய்ய ஆரம்பித்ததால் உணர்வற்ற நிலையில் வெல்ஸ் சாய்ந்தார். இதன்பின் சிறிது அசைவுகூட அவரிடம் ஏற்படவில்லை; வெல்ஸ் உணர்வை மறுபடியும் பெறவே இல்லை. மயக்க மருந்தின் உணர்வற்ற தன்மை கொண்டு வெல்ஸ் தற்கொலை புரிந்துகொண்டார். அப்போது அவருக்கு வயது முப்பத்து மூன்றுதான்.

வெல்ஸ் இறந்த பின்னர் அவர் கண்டுபிடித்த நைட்ரஸ் ஆக்சைட் மயக்க மருந்து உபயோகத்திலிருந்து அறவே புறக்கணிக்கப்பட்டது. 1863-ல் பேராசிரியர் கோல்டன்—முன்பு வெல்ஸ் கண்டு பிடிப்பிற்குக் காரணமாக அமைந்த அறிவியல் விழாவைக் கூட்டிய கோல்டனே—நைட்ரஸ் ஆக்சைடின் மயக்க மருந்து தன்மையைப் பலவாறு ஆராய்ந்து மறுபடியும் ரண மருத்துவத்தில் புகுத்தினர். கோல்டன் பல்மருத்துவச் சங்கம் என்ற அமைப்பு அமெரிக்காவின் முக்கிய நகரங்களிலெல்லாம் ஏற்படுத்தப்பட்டு நைட்ரஸ் ஆக்சைட் மயக்க மருந்தின் உதவிகொண்டு ரண மருத்துவம் தொடரப்பட்டது.

இடைப்பட்ட பதினைந்து ஆண்டுகளில், மயக்கமருந்து கண்டுபிடிப்புபற்றிய சச்சரவு அதன் உச்ச நிலையை அடைந்தது. மார்டன், ஜாக்சன் இருவரும் தனித்தனியே அடிக்கடி துண்டு அறிக்கைகள் வெளியிட்டு, தங்கள் தங்கள் உரிமையை நிலைநாட்டுவதிலேயே கவனஞ் செலுத்தி வந்தனர்.

அமெரிக்க காங்கிரஸ், மார்டனின் கண்டுபிடிப்பை போற்றும் வகையில் அவருக்கு 100000 டாலர் பரிசளிக்க முன்வந்தது. ஆனல் ஜாக்சன் இதை எதிர்த்து, தானே கண்டுபிடிப்பிற்குரியவனென்ற வாதத்தை எழுப்பினர். மார்டன், ஜாக்சன் இருவருக்கும் தனித் தனிக் கட்சிகள் ஏற்பட்டன. காங்கிரஸ் மகாசபையில் உறுப்பினர்கள் இரு கட்சியாகப் பிரிந்து சண்டையிட்டனர். செய்தித்தாள்களும் தத்தமக்கு ஒருவரைக்கொண்டு அவருக்காகக் கருத்துரை வழங்கின. கடைசியாக கண்டுபிடிப்புபற்றிய வாதம் ஆய்விற்கு விடப்பட்டது.

இதில் மார்டன் ஜாக்சனைவிட தந்திரமான வழிகளைக் கையாண்டார். மயக்கமருந்து தனியுரிமையின் வாயிலாகக் கிடைத்த வருமானத்தில் பெரும் பகுதியை, பாராளுமன்ற உறுப்பினர்களை வரவேற்றுத் தனது கோரிக்கைக்கு ஆதரவு தேடுவதிலேயே செலவழித்தார். இதற்காக வேண்டி பல இடங்களிலிருந்து மார்டனுக்கு நன்கொடைகளும் வந்தன.

இதையல்லாமல், மார்டனின் பெரும் ஆதரவிற்கு ஜாக்சனின் குறைபாடுகள் ஒரு காரணமாக அமைந்தது. 1852-ல் கூடிய காங்கிரஸ் மகாசபையில் பரிசு யாருக்கு அளிப்பது என்பதுபற்றிய வாதம் ஓட்டுக்கு விடப்பட்டது மார்டன் மூன்றில் இரண்டு பங்கு ஓட்டுகள் பெற்று கண்டுபிடிப்புக்குரியவராகி அதன்மூலம் பரிசுக்குத் தகுதியுடையவரும் ஆனர்.

இந்தச் சமயத்தில் கனெக்டிக்ட் மாநிலத்தின் பிரதிநிதியாக அமர்ந்திருந்த ட்ரூமன் ஸ்மித் (Truman Smith) என்பவர் புதியதோர் வாதத்தை எழுப்பினர். அவர் ஹொரேஸ் வெல்ஸ் வெளியிட்ட புத்தகத்தையும் அறிக்கைகளையும் எடுத்துக்காட்டி மறுபடியும் ஆராய்ந்து முடிவு தெரியும் வரையில் பரிசளிப்பை நிறுத்தி வைக்கும்படிக் கேட்டுக் கொண்டார். காங்கிரஸ் அப்படியே ஒப்புக் கொண்டது.

ஸ்மித், வெல்ஸ் செய்த ஆராய்ச்சிகளின் குறிப்புகளைச் சேகரிக்க முற்பட்டார். கைக்கு எட்டியும் வாய்க்கு எட்டாததைப் போன்று பரிசிலைப் பெற முடியாதிருந்த மார்டன் வெல்சிற்கு எதிரான சாட்சிகளைத் தேடுவதில் முனைந்தார்.

முதன் முதல் வெல்சின் ஆராய்ச்சியில் உடன் இருந்து கவனித்த ரிக்ஸ் என்பவரை, மார்டன் பணங்கொடுத்துத் தன் வயப்படுத்த எண்ணினர். ஆனல் ரிக்ஸ் மறுத்துவிட்டார். ரிக்சின் மூலம் வெல்சின் மனைவியை அணுகி ஒரு சமாதான ஏற்பாட்டிற்கு—மார்டன் பரிசைப் பெறுவது: அதை தங்களுக்குள் பங்கிட்டுக் கொள்வது—இணங்கும்படிக் கேட்டுக் கொண்டார். வறுமையின் கொடிய கரங்களில் பிடிபட்டிருந்த நிலையிலும், தனது கணவனின் உரிமையும் புகழும் அன்றி, பணத்தைத் தான் ஏற்றுக்கொள்ள இயலாதென்று வெல்சின் மனைவியார் தெரிவித்தார்.

மார்டனுக்குக் கடைசியாக கூலி என்பவர் கிடைத்தார். கோல்டன் நடத்திய விழாவில்

**அட்டைப் படம்**

குளோரபாரம் மயக்கமருந்தைக் கண்டுபிடித்து, மதகுருமார்களின் எதிர்ப்புக்கிடையில், வேதனையற்ற குழந்தைப்பேறு முறையைக்கண்ட சர் ஜேம்ஸ் யங் சிம்சன் (Sir James-Young Simson)

மயங்கி ஆடிய கூலி யைக்கண்டே வெல்ஸ் மயக்கமருந்து ஆராய்ச்சியில் இறிங்கினர். அதே கூலி மார்டனின் வேண்டுகோளின்படி வெல்சிற்கு எதிராக சாட்சி கொடுத்தார். வெல்சிற்கு தான்தான் மயக்கமருந்தின் உண்மையைக் கூறி ரணமருத்துவ உபயோகத்தை வற்புறுத்தியதாகவும், பின்னல் வெல்ஸ் முயற்சியைக் கைவிட்டு விட்டதாகவும் கூலி கூறினர்.

காங்கிரஸ் மறுபடியும் கூடியது. ஸ்மித் தக்க ஆதாரங்களை எடுத்துக்காட்டி, மார்டன் ஜாக்சன் இவர்களது கோரிக்கையை எதிர்த்து சிக்கலுக்குள்ளான அதை வழக்கு மன்றத் தீர்ப்புக்கு அனுப்ப வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார். ஆனல் மக்கள் சபையில் இத் தீர்மானம் நிறைவேறவில்லை.

இதற்கிடையில் கண்டுபிடிப்பின் உரிமை கோரி இன்னெருவர் வந்து சேர்ந்தார். கிராபோர்டு லாங் என்பவர் 1842லேயே ஈதரைப் பயன்படுத்தி ரண மருத்துவம் செய்ததை எடுத்துக்கூறி அவரே கண்டுபிடிப்பிற்கும் பரிசிற்கும் தகுதியானவர் என்று வில்லியம் கிராஸ்பி டாசன் என்ற ஜியார்ஜியா மாநிலஉறுப்பினர் வாதிட்டார்.

இப்பெருங் குழப்பத்திடையே ஒரு உண்மையான முடிவைக் காண முடியாததால் காங்கிரஸ் பரிசில் கொடுக்கும் திட்டத்தை நிறுத்தி விட்டது.

1862-லேயே மார்டனது ஈதர் மயக்கமருந்து முறை தனியுரிமைக் குரியதல்ல என்று வழக்கு மன்றம் தீர்ப்பளித்துவிட்டது. இதன் பின்னர் காங்கிரஸ் அளிக்கவந்த பரிசும் கிடைக்காது போகவே மார்டன் மனமுடைந்து போனர். தனது தொழிலை ஆரம்ப காலத்திலேயே கைவிட்டு விட்டார். ஆதலால் வருவாயில்லாமல் வறுமையில் உழன்ரர். வறுமையும் வாட்டமும் சேர்ந்து மார்டனது உடல் நலத்தைச் குன்றச் செய்தது. கடைசிக் காலத்தில் நியூயார்க் நகருக்கு வந்து சேர்ந்தார். 1865-ம் ஆண்டு ஜூலை மாதம் 15 நாளன்று மாலே நேரம் வெளியில் சென்றபோது மார்டன் ஒரு வேலியைக் கடக்க முயற்சிக்கையில் தவறி விழுந்து உணர்வற்ற நிலையை அடைந்தார். மருத்துவ விடுதிக்கு எடுத்துச் செல்லபட்டு இரண்டு மணி நேரத்திற்குள் மார்டன் தனது 49வது வயதில் உயிர் நீத்தார்.

ஜாக்சன் மயக்க மருந்து கண்டுபிடிப்பிற்கு உரிமை கொண்டாடியதுபோல் மோரிஸ் கண்டுபிடித்த தந்திக் குறிப்புகள்தான் கண்டதென்றும், ஸ்கோவின் என்பவர் கண்டுபிடித்த வெடி மருந்துதான் கண்டுபிடித்ததென்றும் வாதாடினர். ஆனல் எதிலும் அவரது கூற்று ஒப்புக்கொள்ளப்படவில்லை. கடைசியில் ஜாக்சன் பயித்தியக்காரர் மருத்துவ விடுதியில் சேர்க்கப்பட்டு சுமார் ஏழு ஆண்டுகள்வரை அங்கிருந்து, தனது எழுபத்தைந்தாவது வயதில் 1880-ல் இறந்தார்.

ரண மருத்துவ மயக்க மருந்து கண்டுபிடிப்பாளர்களில், போற்றுதலுக்கும் புகழுக்கும் உரியவராக மதிக்கப்பட்டு, தனது வாழ்நாளின் கடைசிவரை நல்ல நிலையே வாழ்ந்தவர் குளோரபாரம் மயக்க மருந்தைக் கண்டுபிடித்த சர் ஜேம்ஸ் யங் சிம்சன் ஒருவரேயாகும். சிம்சனுக்கும் மதத்துறையிலிருந்து மாபெரும் எதிர்ப்புத் தோன்றியதென்றாலும், தனது நாவன்மையினுலும் தளரா முயற்சியினுலும் எதிர்ப்பைச் சமாளித்து, தனது கொள்கையை நிலைநாட்டி வெற்றி பெற்றார்.

1846-ம் ஆண்டில் அமெரிக்காவில் போஸ்டன் நகரில் ஈதரைப் பயன்படுத்தி வேதனையற்ற ரண மருத்துவம் நிறைவேற்றிய செய்தி லண்டன் மாநகருக்கு எட்டியது. அப்பொழுது வட லண்டன் மருத்துவ விடுதியில் பணியாற்றிவந்த ராபர்ட்லிஸ்டன் என்பவர், ஈதர்மயக்கமருந்தை ரணமருந்தை ரணமருத்துவத்தில் புகுத்த எண்ணங்கொண்டார். 1846, டிசம்பர் 21ம் நாளன்று லிஸ்டன் ஈதர் வாயுவைக் கொடுத்து பிரெடரிக் சர்ச்சில் என்பவருடைய காலே வேதனே ஏற்படாதவாறு அறுத்து வெற்றி பெற்றார்.

## நகைச்சுவை வேதநாயகர்

குதிரைப் பந்தயம் நடைபெற்றது. அதில் ஒரு குதிரை தோற்றுப் போய் கடைசியாக வந்து சேர்ந்தது. அதைக் கண்டு எல்லோரும் நகைத்தனர். கடைசியாக வந்த குதிரையின் உரிமையாளன்தான் பிரதாப முதலியார். அவர் மகிழ்ச்சியோடு சொன்னது என்ன தெரியுமா?

"என் குதிரைதான் எல்லாக் குதிரைகளையும் விரட்டி யடித்தது என்பது எனக்கும் தெரியும். உங்களுக்கும் தெரியும். ஆனல் அக்குதிரைகள் அனைத்தும் என் குதிரையைக் கண்டு ஏன் பயந்து ஓடுகின்றன என்பதுமட்டும் விளங்கவில்லை." என்ருர்.



# "அவரா நீங்கள்?"

சிறுவயதிலிருந்தே தாடியோடு கூடிய தோற்றப்பொலிவு என் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்திருந்தது. கவர்ச்சிதரும் அழகான தாடியோடு கூடிய அறிவியல் அறிஞர்கள், தத்துவ அறிஞர்கள், அரசியல் தலைவர்கள், சமயத்தலைவர்கள் ஆகியவர்களை நேரில் காணும்போதும் சரி, அவர்களின் எழில்மிக்க படங்களை எடுவில் காணும்போதும் சரி அவர்களை உவகையோடு உற்றுக் காண்பதில் எனக்குத் தனி விருப்பம் ஏற்பட்டிருந்தது. அந்த விருப்பம் என்னுள்ளத்தில் வேணவாவாக அரும்பிமலரத் தொடங்கிற்று.

நான் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் மூன்றாம் ஆனர்சு வகுப்பில் படித்துக் கொண்டிருந்தபோது, நாமும் தாடிவைத்துக்கொண்டால் என்ன, என்ற எண்ணம் காய்த்துக் கனியத் தொடங்கிற்று. துணிந்து தாடி வளர்க்கத் துவங்கினேன். நான்காவது ஆனர்சு வகுப்பின்முதல் பருவம் முடியும் காலம் வரையில் தாடி வைத்திருந்தேன். செப்டெம்பர் திங்கள் விடுமுறை நாட்களைக் கழிப்பதற்குச் சொந்த ஊருக்குச் சென்றிருந்தேன். உற்ருர் உறவினர் "தாடி, வயதான தோற்றத்தைத் தருகிறது; எனவே அதனை எடுத்து விடு" என்று வற்புறுத்தினர்கள். நானும் இணங்கி எடுத்துவிட்டேன். பின்னர் நானும் எனது மைத்துனரும் பெரியார் அவர்களைப் பார்க்க ஈரோடு சென்றிருந்தோம். அதுபோது தோழர் ஈ. வெ. கி. சம்பத் அவர்கள், சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் படித்துக்கொண்டிருந்தார். விடுமுறைக்காக வந்திருந்தார். அப்பொழுது நானும் அவரை அறிய மாட்டேன்; அவரும் என்னை அறிய மாட்டார். அவர் யார் என்பதைப் பிறரிடம் வினவித் தெரிந்துகொண்டேன். நாங்கள் சென்ற முதல்நாள், நண்பகல் உணவு முடிந்தவுடன் பெரியார், சம்பத், அவர் தந்தையார், ஆவுடையப்பன், நான் ஆகிய எல்லோரும் உட்கார்ந்து உரையாடிக்கொண்டிருந்தோம். என்னை அடுத்துத் தோழர் சம்பத் அவர்கள் உட்கார்ந்திருந்தார்.

நான் "நீங்கள் பச்சையப்பன் கல்லூரியில் படிக்கிறீர்களா?" என்று அவரைக்கேட்டேன். "ஆமாம்!" என்ருர். "எந்த வகுப்பு?" என்றேன்; "முதல்வகுப்பில் படிக்கிறேன்!" என்ருர். அவர் திரும்ப என்னைப் பார்த்து "நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார். "நான் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் படித்துக் கொண்டிருக்கிறேன்!" என்றேன். "எந்த வகுப்பில் படிக்கிறீர்கள்?" என்ருர். "நான்காம் ஆனர்சு வகுப்பில் படித்துக் கொண்டிருக்கிறேன்!" என்றேன்.

"அங்கே தாடிவைத்துக்கொண்டு நாராயணசாமி என்று ஒருவர் இருக்கிருராமே!" என்ருர். "ஆமாம்!" என்று புன்சிரிப்போடு கூறினேன். "அவரை உங்களுக்குத் தெரியுமா?" என்ருர். "தெரியும்!" என்றேன். "அவரோடு நெருங்கிய பழக்கம் உங்களுக்கு உண்டா?" என்ருர் "உண்டு!" என்றேன் "அவர் நமது இயக்கப்பற்றுடையவராமே!" என்ருர். "ஆமாம்!" என்றேன். "அவர் எப்படி?" என்ருர். அதற்கு என்னை என்னல் மறைத்து வைத்துக்கொள்ளமுடியவில்லை. நான் சிரித்துக்கொண்டு "அவர்தான் நான்!" என்றேன். தோழர் சம்பத் அவர்கள் உடனே வியப்படைந்து, "அவரா நீங்கள்?" என்ருர். ஆமாம்!" என்றேன். "தாடி உண்டு என்று சொன்னர்களே!" என்ருர். "தாடி வைத்திருந்தேன். நான்கு நாட்களுக்கு முன்புதான் எடுத்துவிட்டேன்!" என்றேன். பிறகு நீண்டநேரம் உரையாடிக் கொண்டிருந்தோம்.

இதுதான் நானும் தோழர் சம்பத் அவர்களும் கூடிப்பேசிய முதல் தடவையாகும். அப்பொழுதெல்லாம் தோழர் சம்பத் அவர்களுக்கு இயக்கப்பற்று உண்டே தவிர, இயக்க நடவடிக்கைகளில் ஆர்வமோ, எழுச்சியோ இருப்பதில்லை.

பிறகு பச்சையப்பன் கல்லூரி விடுதியில் இரண்டாம் முறையாக அவரைக் கண்டேன். அப்பொழுது அவர் கல்லூரி ஆசிரியர்களும், மாணவர்களும், மாணவிகளும் கண்டு அஞ்சும்படியான முரட்டு மாணவர்களின் கூட்டத்திற்குத் தலைவராக விளங்கினர். காலஞ்சென்ற பேராசிரியர் வரதாசன் அவர்கள்தான் அவருக்கு உற்ற நணபர். 'முரட்டுமாணவர சமபத' துக்கும் 'கனிவான அரசியல் தலைவர் சம்பத்' துக்கும் இடையில் எவ்வளவோ மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன.

—இரா. நெடுஞ்செழியன்.

Regd- M 6296



சென்னை ஒற்றைவாடை தியேட்டரில்

26—9—56 முதல்

தினசரி நடைபெறும்.

ராவணேஸ்வரனின் இதயத்திலே இரகசியமாகப் புதைந்துகிடந்த வரலாறு !
புவி மக்களுக்குப் புதுமையானதொரு கருத்துப்படையல் !!
பகுத்தறிவாளர்கள் பார்த்துப் பரவசம் கொள்ளும் பண்புடைய நல்லோவியம் !!!

மனோகர் நடிக்கும்

நேஷனல் தியேட்டர்ஸ்

# ★ இலங்கேஸ்வரன் ★

(தமிழ் நாடகம்)

துறையூர் கே. மூர்த்தி எழுதியது.

**டிக்கெட் கட்டணம்: ரூ. 5, 2-8-0, 1-8-0, 0-12-0, 0-6-0.**

கலைவளர் ஆர்வமுள்ளோர் இலவச டிக்கெட்டுகளை விரும்பாதீர்.

கண்டிராக்டர்: சே. ம. அர்ச்சுனன்.

---




தமிழ் நாட்டில் தலை சிறந்த

# வெண்சங்கு சீயக்காய்தூள்

எங்கும் கிடைக்கும்

எங்களிடம் தயாராகும் மணத்தில் சிறந்த

**செல்வம்—ராணி ஊதுபத்திகளை**

வாங்கி உபயோகியுங்கள்

தயாரிப்பாளர் :- வெண்சங்கு சீயக்காய்தூள் தொழிற்சாலை

**3037-38, டபீர் குளம் ரோடு, தஞ்சாவூர்.**

"மன்றம்" அச்சகத்தில் (26, நைனியப்பன் தெரு, மண்ணடி, சென்னை-1)
ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன், எம். ஏ. அவர்களால் அச்சிடப்பட்டு வெளியிடப்படுகி

